குமரகுருபர அடிகள்
அருளிய

# மதுரை மீனாட்சியம்மை குறம்

# மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை




தெளிவுரை, அருஞ்சொற்பொருள் :
புலவர் இரா இளங்குமரன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1977

இராமு இளங்குமரன் (1930)



கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௧௬௬௫

முதற்பதிப்பு: செப்டம்பர் 1977

O31, 1L50, 5-6
N77

MADURAI MEENAKSHIAMMAI KURAM

MADURAI MEENAKSHIAMMAI
IRATTAIMANIMAALAI

அப்பர் அச்சகம், சென்னை-600 001. (1/2)

# பதிப்புரை

மதுரை மீனுட்சியம்மைமீது பாடப்பெற்ற குறத்திப்பாட்டே, மீனுட்சியம்மை குறம் என வழங்கப்படுகிறது. பன்னிரு பாட்டியல் என்னும் இலக்கண நூலில் 'குறம்' என்ற நூலின் இலக்கணம் கூறப் பட்டுள்ளது.

> ''இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமுந்
> திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே''

என்பது நூற்பா. ஒரு குறத்தி குறி கூறுவதாக அமைவது 'குறம்' என்னும் நூலாதலின் இந் நூலுள் குறத்தி குறிகூறுவது தொடர்பான செய்திகளே கூறப்பெற்றுள்ளன. குறம் என்ற நூலில் குறத்தியின் கூற்று மட்டுமே வரும். குறவஞ்சி என்னும் நூலில் வேறு பலர் கூற்றுக் களும் வரும்; இது வேறுபாடு.

பாட்டுடைத் தலைவனைக் காமுற்ற தலைவி ஒருத்தியைக் கண்டு குறத்தி குறிகூறுவது மரபு. இங்குப் பாட்டுடைத் தலைவனாக சொக்கலிங்கப் பெருமானும் தலைவியாக மீனுட்சியம்மையும் கூறப்பெற் றுள்ளனர். இந் நூலுள் காப்புடன் சேர்த்து ஐம்பத்தொரு செய்யுட்கள் உள்ளன.

மீனுட்சியம்மை இரட்டைமணிமாலை யென்னும் இந் நூலுள் இருபது செய்யுட்கள் உள்ளன. முத்தும் பவளமுமாகிய இருமணிகளால் கோக்கப் பெற்ற மாலைபோல, வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமாகிய இருவகைச் செய்யுட்களால் அமைந்த நூலாதலின் இரட்டைமணிமாலை என வழங்கப்படுகிறது.

மீனுட்சியம்மையின் திருவருளைப் பெறுவதற்கு இந்த நூல்கள் இரண்டும் துணை செய்வனவாகும். ஆதலால் இறைவியின் அருள் பெற விரும்பும் அன்பர்கள் இந் நூலினை வாங்கிப் படித்தும், அன்பர்களுக்கு வாங்கிக் கொடுத்தும் பயன் எய்த விரும்புகின்றேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# குமரகுருபரர் வரலாறு

திருநெல்வேலி மாவட்டத்தில் திருவைகுந்தத்தை அடுத்துக் கைலாசபுரம் என வழங்கப்பெறும் சிற்றூரில் சைவவேளாளர் குலத்தில் சண்முக சிகாமணிக் கவிராயரும் சிவகாம சுந்தரி அம்மையாரும் ஆற்றிய நற்றவப் பயனுல் குமரகுருபரர் அவர்கட்கு மைந்தராய்த் தோன்றினுர். அவர் பிறந்த நாள்முதல் ஐந்து அகவை வரையிலும் வாய்பேசாது ஊமையாய் இருந்தார். அது கண்ட பெற்றோர் மனம் வருந்தித் தமக்கு உறுதுணையாகிய திருச்செந்தூர் முருகப்பெருமான் திருமுன் சென்று வழிபட்டுத் தம் குறையைத் தெரிவித்து அருள்புரிய வேண்டினர்.

முருகப்பெருமான் அருளால் அக் குழந்தை அப்பொழுதே வாய் திறந்து அங்கிருந்தோர் வியப்புறும் வண்ணம் முருகனைப் போற்றிப் பாடியது அதுவே 'கந்தர் கலிவெண்பா' ஆகும். பெற்றோர் மகிழ்ந்து பெருமானை வழிபட்டனர். பின்னர்க் குமரகுருபரர் வளர்ந்து இளைஞரான பின் தம் பெற்றோரிடம் விடைபெற்றுப் பல திருப்பதிகட்குச் சென்று வழி பட்டார். இவர் தம் கல்வி அறிவும் கவிபாடும் திறமும் கண்டு இவரை மக்கள் வரவேற்றுச் சிறப்புச் செய்தனர். மதுரை மன்னர் திருமலை நாயக்கரும் சிறப்புச் செய்து பல பரிசுகளை வழங்கினுர்.

அதன்பின் அடிகள் தருமபுரத்துத் தலைவராக விளங்கிய மாசிலா மணி தேசிகரை வழிபட்டு அவருக்கு மாணக்கரானுர். பின்னர்க் காசிமா நகர் சென்று அங்கு ஆட்சிபுரிந்த முகமதிய மன்னரைத் தம் வயப்படுத்தி அவர் அளித்த இடத்தில், இப்போது குமாரசாமி மடம் என வழங்கும் ஒரு மடத்தினை நிறுவினுர். சைவ சமயத் தொண்டு செய்து பல ஆண்டுகள் வாழ்ந்து, காசிமா நகரில் வீடுபேறுற்றுர். இவர்காலம் ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்கு முற்பட்டதாகும். இவர் இயற்றிய நூல்கள் சொற்சுவையும் பொருட் சுவையும் பெற்று விளங்குவதோடு, திருவருட் செல்வத்தை வழங்கும் சிறப்பும் உடையனவாகும்.

இவர் இயற்றிய நீதிநெறிவிளக்கம், சகல கலாவல்லிமாலை, மீனுட்சி யம்மை பிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் என்னும் நூல்கள் புலவர்களாற் பெரிதும் பாராட்டப்படுகின்றன. தமிழ்மொழியிற் சிறந்த பயிற்சியும் புலமையும் பெற விரும்புவோர் குமரகுருபர அடிகளின் நூல்களை விரும்பிப் படிப்பது இன்றியமையாததாகும்.

---

# மதுரை மீனாட்சியம்மை குறம்

## காப்பு

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கார்கொண்ட பொழில்மதுரைக் கர்ப்பூர
வல்லிமணங் கமழும் தெய்வத்
தார்கொண்ட கருங்குழல்அங் கயற்கண்ணா
யகிகுறப்செந் தமிழால் பாட
வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட்(டு)
இருசெவிமும் மதத்து நால்வாய்ப்
போர்கொண்ட கவுள்சிறுகண் சித்திவிநா
யகன்துணைத்தாள் போற்று வாமே.

(தெளிவுரை) மேகம் தவழும் சோலைகளையுடைய மதுரையில் எழுந்தருளிய கர்ப்பூரக் கொடி போன்றவளும், மணம் கமழும் தெய்வத் தன்மை வாய்ந்த மாலையை அணிந்த கரிய கூந்தலையுடையவளும், அங்கயற்கண்ணி என்னும் பெயருடையவளும் ஆகிய ஒப்பற்ற தலைவியின் பெயரால் குறம் என்னும் நூலைச் செவ்விய தமிழால் யாம் பாடுதற்கு நெடுமை யமைந்த, புள்ளிகளையுடைய முகத்தையும் ஐந்து கைகளையும் ஒரு கொம்பையும் இரண்டு செவிகளையும் மூன்று மதங்களையும் தொங்கும் வாயையும் பொங்குபோல் அமைந்த கன்னத்தையும் சிறிய கண்களையும் உடைய சித்தி விநாயகப் பெருமானின் இரண்டு திருவடிகளையும் போற்றுவோம்.

(அருஞ்சொற் பொருள்) கார் - மேகம்; பொழில் - சோலை; தார் - மாலை; குழல் - கூந்தல்; வார் - நீண்ட; புகர் - புள்ளி; கோடு-கொம்பு; நால்வாய் - தொங்கும் வாய்; போர் - பொங்கு; கவுள் - கன்னம்; துணை-இரண்டு. அங்கயற்கண்நாயகி: அன்னையின் பெயர். சித்திவிநாயகன்: மதுரைத் திருக்கோயில் விநாயகர் பெயர்.

## சிந்து

1. பூமருவிய பொழில்திகழ் மதுரா
புரிமருவிய அங்கயற்கண் அம்மை
தேமருவிய மதிதவழ் குடுமித்
தென்பொதியக் குறத்திநான் அம்மே.

(தெ - ரை.) "அம்மே நான், பூக்கள் பொருந்திக் கிடக்கும் சோலைகள் விளங்கும் மதுரைத் திருநகரில் கோயில் கொண்ட அங்கயற்கண் அம்மையின், தெய்வத் தன்மை வாய்ந்ததும் மதியம் தவழும் முகடுகளையுடையதும் ஆகிய தென்பொதியமலைக் குறத்தி யாவேன்."

'அம்மை பொதியம்' என இயைக்க. குறி சொல்பவள் குறி கேட்கும் தலைவியிடம் தன் இருப்பிடம் கூறியது இது. மேல் வருனவும் (2, 3) இதுவே.

(அ - வி.) மருவிய - பொருந்திய; குடுமி - சிகரம், முகடு; தென் - அழகு; தெற்குமாம்.

2. செந்நெல் முத்தும் கன்னல்முத் தும்ஒளி
திகழ்மதுரை அங்கயற்கண் அம்மை
பொன்னுமுத்தும் சொரியும்வெள் அருவிப்
பொதியமலைக் குறத்திநான் அம்மே.

(தெ - ரை.) "அம்மே நான், 'செந்நெல்' தந்த முத்தினாலும் கரும்பு தந்த முத்தினாலும் ஒளிவிளங்கும் மதுரை அங்கயற்கண் அம்மையின், பொன்னும் முத்தும் அள்ளிவீசும் தூய அருவிகளை யுடைய பொதியமலைக் குறத்தி யாவேன்."

(அ - வி.) கன்னல் - கரும்பு; நெல்லிலும் கரும்பிலும் முத்துப் பிறக்கும் என்பது இலக்கிய வழக்கு. நெல், கரும்பு முதலியவற்றின் முத்துகளைக் கூறியமையாலே சங்கு தந்த முத்துகள் கிடத்தல் கூறாமலே அறியப் பெறும்.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

3. செண்டிருக்கும் வடவரையில் சேலிருக்கும்
அரசிருக்கும் தென்னர் ஈன்ற
கண்டிருக்கும் மதுரமொழிக் கனியிருக்கும்
துவரிதழ்அங் கயற்கண் பாவை
வண்டிருக்கும் நறைக்கமல மலரிருக்கும்
பரிபுரத்தாள் மனத்துள் வைத்துக்
கொண்டிருக்கும் தமிழ்முனிவன் குடியிருக்கும்
பொதியமலைக் குறத்தி நானே.

(தெ - ரை.) "அம்மே, கரிகால் சோழனால் அறையப்பட்ட செண்டின் அடையாளம் இருக்கும் இமயமலையில் மீன் அடையாளம் பொறித்து வைத்து ஆட்சிபுரியும் பாண்டியர் பெற்ற கற்கண்டு போன்ற இனிய மொழியையும், கொவ்வைக்கனி குடியிருந்தாற் போன்ற செவ்விதழையும் உடையவளும் அங்கயற்கண்ணி என்னும் திருப்பெயருடையவளும் ஆகிய அம்மையின் வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர்போன்ற சிலம்பணிந்த திருவடிகளைத் தன்மனத்துள் வைத்திருக்கும் அகத்திய முனிவன் குடியிருக்கும் பொதியமலைக் குறத்தி நான்."

(அ - ள்.) செண்டு - ஒரு கருவி; கோடரி போன்றது; சேல்-மீன்; தென்னர் - பாண்டியர்; கண்டு - கற்கண்டு; மதுரம் - இனிமை; துவர் - செம்மை, பவழம்; நறை - மணம், தேன்; கமலமலர் - தாமரை மலர்; பரிபுரம் - சிலம்பு; தாள் - திருவடி; தமிழ் முனிவன் - அகத்திய முனிவன். "பாவை பரிபுரத் தாள் மனத்துக் கொண்டிருக்கும் முனிவன் மலைக்குறத்தி நான்" என இயைக்க.

## சிந்து

4. மங்கை குங்குமக் கொங்கை பங்கயச்
செங்கை அங்கயற் கண்ணினாள் மறை பண்ணினாள்
பங்க னைக்கழல் அங்க னைச்சொக்க
லிங்க னைக்கூடி மேவுவாய் கோல்லிப் பாவையே.

(தெ - ரை.) கொல்லிப் பாவை போன்றவளே, நீ மங்கையும் செஞ்சாந்து அணிந்த மார்பினனும் செந்தாமரை மலர் போன்ற சிவந்த கையினனும் கயல்மீன் போன்ற கண்ணினளும் மறைநூல்களால் பாடப்படுபவளும் ஆகிய மீனாட்சியம்மையை இடப்பாகமாகக் கொண்ட கழலும் எலும்புமாலை அணிந்த சொக்கலிங்கப் பெருமானைக் கூடி இன்புறுவாய்.

இது குறத்தி தலைவிக்குக் கூறிய குறியாகும். மேல் வருவதும் இது.

(அ - வ்.) குங்குமம் - செஞ்சாந்து; பங்கயம் - தாமரை; மறை - வேதம்; பண் - இசை; பங்கன் - கணவன்; அங்கன் - எலும்பு மாலை அணிந்தவன். அமரர் உடலினின்று கழன்ற எலும்பு மாலையை இறைவன் அணிந்தான் என்பது கதை. சொக்கலிங்கன், மதுரையில் கோயில் கொண்ட இறைவன் திருப்பெயர். மேவுதல் - அடைதல், பொருந்துதல். கொல்லிப் பாவை - கொல்லிப் பாவை போன்ற தலைவி.

## சிந்து (வேறு)

5. வஞ்சி யேஅப ரஞ்சி யேமட மயிலே வரிக்குயிலே
கொஞ்சி யேபழி யஞ்சி யாருனைக் கூடுவார் இனியம்மே.

(தெ - ரை.) அம்மே, வஞ்சிக் கொடி போன்றவளே, உருக்கிவிட்ட பொன் போன்றவளே, மெல்லிய மயில் போன்றவளே, இசை பாடும் இனிய குயில் போன்றவளே இனிச் சொக்கநாதர் உனைக் கொஞ்சிக் கூடுவார்.

(அ - வ்.) வஞ்சி - வஞ்சிக்கொடி; அபரஞ்சி - உருக்கிவிட்ட பொன்; மடம் - மென்மை; வரி - இசைப்பாட்டு; அழகுமாம்; பழியஞ்சியார் : பெயர், சொக்கநாதர். "அம்மே பழியஞ்சியார் உனைக் கொஞ்சியே கூடுவார்" என இயைக்க.

## சிந்து (வேறு)

6. புழுகாலே தரைமெழுகு பிள்ளை யார்வை
பொற்கோலம் இட்டுநிறை நாழி வையாய்.

(தெ - ரை.) அம்மே, புழுகி (புனுகி)னால் தரையை மெழுகு; பிள்ளையார் பிடித்துவை; அழகிய கோலம் இட்டு; நிறைநாழியும் வைப்பாயாக.

(அ - ள்.) பொன் - அழகு; நிறைநாழி - நெல் நிறைத்து வைக்கப் பெற்ற நாழி. நாழி - முகத்தலளவைக் கருவிகளுள் ஒன்று.

இது குறிகூறும் களம் அமைக்கக் கூறியது.

சிந்து (வேறு)

7. ஆழிகைதா அழகாரும் அங்கயற்கண் அம்மைபங்கர்
அழகியசொக்க ரருள்புரிவருன் பான்மருவி அம்மே.

(தெ - ரை.) அம்மே, மோதிரம் அணிந்த கையைத் தா; அழகமைந்த அங்கயற்கண் அம்மையை இடப்பாகங் கொண்ட அழகிய சொக்கநாதர் உன்னிடம் வந்து அருள் செய்வார்.

(அ - ள்.) ஆழி - கணையாழி, மோதிரம்; கை தா என்றது குறி பார்த்துக் கூறுதற்குக் கையைக் காட்டுதல் வேண்டி; அழகு ஆரும் - அழகு அமைந்த; உன்பால் மருவி - உன்னிடம் வந்து. "அம்மே, சொக்கர் உன்பால் மருவி அருள்புரிவர்" என இயைக்க. ஆழிக்கை என்பது 'ஆழிகை' என நின்றது.

இதுவும் குறிகூறியது.

சிந்து (வேறு)

8. பேசும் என்குறி மோசம் என்றிடில்
ஆர்சொ லும்பரி யாசமே
வாச மென்குழ லாய் சவுந்தர
மாறர் வந்தணை வாரமே.

(தெ - ரை.) அம்மே, கூறும் என் குறி பொய்யாம் எனில் எவர் சொல்லும் நகைப்புக் குரியதேயாம். மணமிக்க மெல்லிய கூந்தலையுடையவளே! சுந்தர பாண்டியராம் சிவபெருமான் உன்னை வந்து கூடுதல் உறுதியாம்.

(அ - ள்.) ஆர் சொலும் - எவர் சொல்லும் சொல்லும். சவுந்தர மாறர் - சுந்தர பாண்டியர், சௌந்தர பாண்டியர். சிவபெருமான் சுந்தர பாண்டியராகத் திருவவதாரம் செய்தது குறித்தது. அமே - அம்மே.

## சிந்து (வேறு)

9\. நங்கை நீகரு துங்குறி சொல்லவுன்
செங்கை தனைக்கொடு வாஎங்கள்
அங்க யற்கண்ணி பங்கர் அருட்சொக்க
லிங்கர் இனிஅணை வார்அம்மே.

(தெ - ரை.) பெண்டிருள் சிறந்தவளே, நீ எண்ணும் குறியை நான் சொல்லுமாறு உன் சிவந்த கையைக் கொண்டுவந்து காட்டு; எங்கள் அங்கயற் கண்ணியின் கணவராகிய அருளாளர் சொக்க லிங்கப் பெருமான் விரைவில் உன்னைக் கூடுவார் அம்மா.

(அ - ன்.) கொடுவா - கொண்டுவா. அணைவார் - கூடுவார்.

## சிந்து (வேறு)

10\. தூசும்ஒரு காசும்வைஉள்
நேசம்வர வேசொல்லநான்
ஈசர்கயி லாசர்மது
ரேசர்உனைச் சேர்வாரம்மே.

(தெ - ரை.) அம்மா, உள்ளன்பு பெருக ஓர் ஆடையும் ஒரு காசும் நான் குறி சொல்வதற்குக் காணிக்கையாக வை; இறைவரும் கயிலாயத் துறைபவரும் ஆகிய சொக்கநாதர் உன்னைச் சேர்வார்.

(அ - ன்.) தூசு - ஆடை; உள்நேசம் வரத் தூசும் காசும் நான் (குறி) சொல்ல வை; மதுரேசர் உனைச் சேர்வர் என இயைக்க.

இது குறிபார்க்கக் காணிக்கை வேண்டியது.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

11\. கைக்குறியின் முகக்குறிநன்(று); இடத்தெழுந்த
கவுளிநன்று; கன்னி மார்வந்(து)
இக்குறிநன் றென்கின்றார்; இடக்கண்ணும்
துடிக்கின்றது; இதன்மேல் உண்டோ ?

பொய்க்குறிய சிறுமருங்குற் பூங்கொடிநீ
அங்கயற்கண் பூவை மாதின்
மெய்க்குறியும் வளைக்குறியும் முலைக்குறியும்
அணிந்தவர்தோள் மேவு வாயே.

(தெ - ரை.) இல்லையோ என்னுமாறு அமைந்த மிகச் சிறிய இடையையுடைய பூங்கொடி போன்றவளே, உன் கைக் குறியினும் முகக்குறி நலமுடையது; இடப் புறத்தே எழுந்த பல்லி சொல்லும் நலமுடையது; அன்றியும் தேவ கன்னியர் எழுவரும் வந்து இக் குறிகள் நல்லவை என்று கூறுகின்றார்; இடக் கண்ணும் துடிக் கின்றது; இவற்றின் மேலும் நற்குறிகள் உளவோ? இல்லை. நீ அங்கயற் கண்ணியாகிய பசுங்கிளியின் உடற்குறியும் வளையற் குறியும் மார்புக்குறியும் அணிந்தவராகிய சொக்கநாதரின் திருத் தோளைச் சேர்தல் உறுதியேயாம்.

(அ - வி.) கவுளி - பல்லி; கன்னிமார் - சப்த(ஏழு) கன்னியர்; பொய்க்குறிய சிறு மருங்குல் - இல்லை என்று சொல்லுமாறு அமைந்த குறுகிய சிறிய இடை; பூவை - கிளி; அம்மையைப், "பசுங்குதலை மழலைக் கிளியே" என அழைக்கும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (63). இறைவர், அம்மையின் மெய்க்குறி வளைக்குறி முதலியவை பெற்றமை சீகாளத்திப் புராணம் தழுவக் குழைந்த படலத்தில் கண்டது.

## கோச்சகக் கலிப்பா

12. கடமலைக்கும் வெம்மலையாம் கைம்மலையும் ஆயிரவாய்ப்
படமலைக்கும் அரவரசும் பரித்தருளும் பார்மடந்தை
குடமலைக்கும் தடமுலையாம் குலமலைகள் இரண்டெனவும்
வடமலைக்கும் தென்பொதியும் மலயமலை என்மலையே.

(தெ - ரை.) (அம்மே) மதத்தால் அலைக்கப்படும் கொடிய மலை போன்ற திசை யானைகள் எட்டையும், ஆயிரம் என்னும் எண்ணிக்கையுடைய பெரிய படங்களை எடுத்தாடும் ஆதிசேடன் என்னும் பாம்பையும் தாங்கிக் காக்கும் நில மகளின் குடத்தை வருத்தும் பெரிய மார்புகளாம் சிறந்த மலைகள் இரண்டெனக் கூறத் தக்க இமயமலைக்கும் அழகு குடிகொண்ட பொதியமலை என் மலை யாகும்.

(அ - ள்.) கடம் - மதம்; கைம்மலை - யானை; அரவரசு - ஆதி சேடன்; பரித்து - தாங்கி; தென் - அழகு.

இதுவும் குறி கூறுவாள் தன் மலைச் சிறப்புக் கூறியதாம். மேல் வருவனவும் (13—16) இது.

## கோச்சகக் கலிப்பா

13. திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
அங்கயற்கண் அம்மைதிரு அருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை என்மலையே.

(தெ - ரை.) அம்மே, திங்களைத் தன் முகட்டில் முடிபோலச் சூடிக் கொள்ளும் மலை; தென்றற் காற்று இனிது தவழும் மலை; நீர் கொண்ட மேகம் சூழ்ந்து கிடக்கும் மலை; தமிழ் வளர்த்த முனிவனும் அகத்தியன் வாழும் மலை; அங்கயற்கண் அம்மையின் திருவருட் பெருக்கே பெருகி வழிவதுபோலக் கரைதாவி எழுந்து அருவி பொழியும் மலை பொதிய மலையாகும். அப் பொதியமலையே என் மலையாகும்.

(அ - ள்.) புயல் - மேகம்; பொங்கு அருவி - நீர் பொங்கி மேலெழும் அருவி; அருவி தூங்குதல் - அருவி இடையீடின்றிப் பொழிதல்.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

14. கன்ன மதம்பெய்(து) உறங்குகோலைக்
களிறு கிடந்து பிளிறுமலை;
தென்னந் தமிழும் பசுங்குழவித்
தென்றல் கொழுந்தும் திளைக்குமலை;
அன்னம் பயிலும் பொழிற்கூடல்
அறலங் கூந்தல் பிடியாண்ட
பொன்னங் குடுமித் தடஞ்சாரல்
பொதிய மலையென் மலையம்மே.

(தெ - ரை.) அம்மே, காதுகளில் இருந்து மதம் பொழிய உறங்கும் பகையைத் தொலைக்கவல்ல ஆண் யானை படுத்துக் கிடந்து பிளிறுமலை; அழகும் இனிமையும் அமைந்த தமிழ் மொழியும், மிக மெல்லிய இனிய தென்றலாகிய குழந்தையும் தவழும் மலை; அன்னங்கள் நெருங்கி உலாவும் சோலைகளையுடைய மதுரையில் கோயில் கொண்ட கருமணல் போன்ற அழகிய கூந்தலையுடைய பெண்யானை போன்ற மீனாட்சியம்மை ஆட்சி செலுத்திய அழகிய பொன் போன்ற முகடுகளையும் அகன்ற சாரல்களையும் உடைய பொதியமலை என் மலையாகும்.

(அ - வி.) கன்னம் - காது; தென்னந் தமிழ் (தென் அம் தமிழ்) தென் - அழகு, இனிமை; பயிலும் - நெருங்கும்; அறல் - மணல்; பிடி - பெண்யானை (மீனாட்சியம்மை); தடம் சாரல் - அகன்ற சரிவு.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

15. மந்தமா ருதம்வளரும் மலைஎங்கள் மலையே;
வடகலைதென் கலைபயிலும் மலைஎங்கள் மலையே;
கந்தவேள் விளையாடும் மலைஎங்கள் மலையே;
கனகநவ மணிவிளையும் மலைஎங்கள் மலையே;
......... ......... ......... .........
......... ......... ......... .........
இந்தமா நிலம்புரக்கும் அங்கயற்கண் அம்மை
இன்பமுறும் தென்பொதிய மலைஎங்கள் மலையே.

(தெ - ரை.) அம்மே, மெல்லிய தென்றல் காற்று உலாவும் மலை எங்கள் மலையாகும்; வடமொழியும் தென்மொழியும் இணைந்து விளங்கும் மலை எங்கள் மலையாகும்; முருகப் பெருமான் (மயிலேறி) விளையாடி மகிழும் மலை எங்கள் மலையாகும்; பொன் முதலாய ஒன்பான் மணிவகைகளும் விளையும் மலை எங்கள் மலையாகும்...... இவ் வுலகைப் பேரருளால் காக்கும் அங்கயற்கண் அம்மை, திருநோக்குக் கொண்டு மகிழும் அழகிய பொதியமலை எங்கள் மலையாகும்.

(அ - வி.) மந்த மாருதம் - இளந்தென்றல் காற்று; வளரும் - பெருகும்; கலை - மொழி; கந்தவேள் - முருகன்; கனகம் - பொன்; நவமணி - ஒன்பான் மணிகள்; புரக்கும் - காக்கும்; தென் - அழகு. இப் பாடலின் மூன்றும் அடி கிடைத்திலது.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

16. சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடும் ஒருபால்;
சினப்புலியும் மடப்பிணையும் திளைத்திடும்அங் கொருபால்;
வெங்கரடி மரையினொடும் விளையாடும் ஒருபால்;
விடஅரவும் மடமயிலும் விருந்தயரும் ஒருபால்;
அங்கணமர் நிலம்கவிக்கும் *வெண்கவிகை நிழற்கீழ்
அம்பொன்முடி சூடும்எங்கள் அபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவும் கும்பமுனி பயிலும்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கள்மலை அம்மே.

(தெ - ரை.) அம்மே, அழகிய இடமகன்ற நிலத்தை எல்லாம் தன் நிழலால் போர்த்துக் கொண்டிருக்கும் வெண் கொற்றக் குடையின் நிழற்கீழே அழகிய பொன்முடி சூடி ஆட்சி புரியும் எங்கள் மீனாட்சியம்மையின் செந்தாமரை போன்ற திருவடிகளை வணங்கும் அகத்திய முனிவர் தங்கும் அழகிய பொதியமலை எங்கள் மலையாகும்; அப் பொதிய மலையில் சிங்கமும் கொடிய யானையும் இணைந்து ஒரு பக்கத்தே விளையாடும்; சினமிக்க புலியும் மெல்லிய பெண்மானும் கூடி ஒரு பக்கத்தே மகிழும்; கொடிய கரடி மரை என்னும் மானுடன் சேர்ந்து ஒருபக்கத்தே விளையாடும்; நஞ்சுடைய பாம்பும் அதற்குப் பகையாம் மெல்லிய மயிலும் விரும்பி ஒரு பக்கத்தே விருந்து கொண்டாடும்.

(அ - வி.) வெங்களிறு - கொடிய களிறு; ஒருபால் - ஒரு பக்கம்; மடம் - மென்மை; இளமையுமாம். மரை - மானின் ஒருவகை; அம் கண் அமர் - அழகிய இடம் அமைந்த; அபிடேகவல்லி - மீனாட்சியம்மை; கும்பமுனி - அகத்தியன்; பதம் - திருவடி; பரவும் - வணங்கும்; காண் - அறிவாயாக. கும்பமுனி பயில்தலும் அன்னை அருள்தலும் மாறுபட்டவையும் கூடி மகிழக் காரணமாயினவாம்.

*பாடவேறுபாடு: வெங்கவிகை.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

17. கச்சைப் பொருது மதர்த்தெழுந்து
கதிர்த்துப் பணைத்த மணிக்கொங்கைப்
பச்சைப் பசுங்கொம்(பு) அங்கயற்கண்
பாவை பயந்த ஆறிருதோள்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
சிறுவன் தனக்குப் பெருந்தடங்கண்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த
குறவர் குலம்எம் குலம்அம்மே.

(தெ - ரை.) அம்மே, மார்புக் கட்டினைத் தாக்கி அடங்காது எழுந்து நிமிர்ந்து பருத்த அழகிய மார்புகளையுடைய பச்சைப் பசுங் கொடியாகிய அங்கயற்கண் அம்மை பெற்ற பன்னிரு தோளையும் வெட்சி மாலை சூடிய மணமிக்க குடுமியையும் உடைய இளைய முருக னுக்குப் பெரிய அகன்ற கண்ணையுடைய மழலைச் சிறுமியாம் வள்ளி நாச்சியை மணம் செய்து கொடுத்த குறவர் குலம் எங்கள் குலமாகும்.

(அ - ள்.) கச்சு - மார்புக்கட்டு; பொருது - போரிட்டு; பணைத்த ; பருத்த; மணி - அழகு; பயந்த - பெற்ற; செச்சை - வெட்சிமாலை; குஞ்சி - குடுமி; தடங்கண் - அகன்ற கண்; கொச்சைச் சிறுமி - இள மழலை மொழிபேசும் சிறுமியாகிய வள்ளியம்மை;

இது குறிகூறுபவள் தன் குலப்பெருமை கூறியது.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

18. கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்குகல்லி எடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழும்சாறும் தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே உடுப்போம்
செழுந்தினையும் நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின் பாயலின்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில் விழுந்துவினை கெடுப்போம்
எங்கள்குறக் குடிக்கடுத்த இயல்பிதுகாண் அம்மே.

(தெ - ரை.) அம்மே, வளமான கொடியின் ஆழத்தில் இருக்கும் வள்ளிக் கிழங்கைத் தோண்டி எடுப்போம்; குறிஞ்சிப் பூவைத் தேர்ந்தெடுத்து முல்லைக் கொடியை நாராகக் கொண்டு தொடுப்போம்; இனிய பழம் பிழிந்த வளமான சாற்றையும் தேனையும் பருகுவோம்; பசுந்தழையால் செய்யப்பட்ட ஆடையையும் மரப் பட்டையால் ஆகிய ஆடையையும் விருப்பமுடன் உடுத்துவோம்; செம்மையாக விளைந்த தினைமாவுடன் இனிய தேனைக் கலந்து விருந்தினர் உண்ணுமாறு கொடுப்போம்; சினத்தால் தாக்கும் வேங்கைப் புலியின் தோல் ஆகிய படுக்கையில் படுப்போம்; காலையில் எழுந்து அங்கயற்கண் அம்மையின் காலில் விழுந்து நாங்கள் செய்த பாவத்தை ஒழிப்போம்; இவை எங்கள் குறக்குடிக்குப் பொருந்திய இயல்புகளாம்.

(அ - வ்.) கல்லி - தோண்டி; தெரிந்து - ஆராய்ந்து; தேறல் - தேன்; வாய்மடுப்போம் - பருகுவோம்; விருந்து - விருந்தினர்; கணி - கண்ணி; வினை - தீவினை, பாவம்; அடுத்த - பொருந்திய.

இது குறி கூறுபவள் தன் குடியியல்பு கூறியது.

இப் பாடலில் உள்ள இறுதி இயைபு நயம் இன்பூட்டும்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

19. புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை இணங்கும்
புதுத்தினைகல் லுரற்பாறை முன்றில்தொறும் உணங்கும்
கல்விடரில் வரிவேங்கை கடமானோ(டு) உறங்கும்
கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந்(து) இறங்கும்
சில்வலையும் பல்வாரும் முன்இறப்பில் தூங்கும்
சிறுதுடியும் பெருமுரசும் திசைதொறும்நின் றேங்கும்
கொல்லையின்மான் பிணையும்இளம் பிடியும்விளை யாடும்
குறிச்சிஎங்கள் குறச்சாதி குடியிருப்ப(து) அம்மே.

(தெ - ரை.) புல்வாய் என்னும் மானின் பார்வையை விரும்பத்தக்க புலியின் பார்வை இணங்கச் செய்யும்; புதிதாக விளைந்த தினை, இடித்தற்கு ஆகும் கல்லுரல் அமைந்த பாறையின்

முகப்புகள் தோறும் காயும்; கற்குகைகளில் வரிகள் அமைந்த வேங்கைப் புலி காட்டுமானோடு சேர்ந்து உறங்கும்; கரிமலையில் இருந்து வெண்ணிற அருவி ஒலியோடு ஒழுகி வீழும்; வலைகள் சிலவும், வார்கள் பலவும் குடிசையின் முன் வளையில் தூங்கும்; சிறிய துடிப்பறையும் பெரிய முரசும் திசை தோறும் தொடர்ந்து ஒலிக்கும்; குடிசையின் பின்புறத்தில் பெண்மானும் இளைய பெண் யானையும் கூடி விளையாடும்; இத்தகைய குறிச்சி எங்கள் குறவ ரினத்தார் குடியிருப்பிடமாகும்.

(அ - சொ.) புல்வாய் - மானின் ஒருவகை; முன்றில் - முற்றம்; உணங்கும் - காயும்; விடர் - குகை; வரி - கோடு; கடமான் - காட்டு மான்; கறங்கி - ஒலித்து; சில் - சில; வார் - தோல்வார்; இறப்பு-வளை; ஏங்கும் - ஒலிக்கும்; கொல்லை - வீட்டின் பின்புறம்; பிணை - பெட்டை; பிடி - பெண்யானை; குறிச்சி - குறவர் குடியிருக்கும் ஊர்.

இது குறிசொல்பவள் தங்கள் குடியிருப்புப்பற்றிக் கூறியது. இதிலமைந்த முரண், நயம் செறிந்தது; இயைபும் இனிது.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

20. வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக்
குறவன்எங்கள் வீட்டில் கொண்ட
வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி
சீதனமா வழங்கி னூரால்
பிள்ளைதனக் கெண்ணெயில்லை அரைக்குமொரு
துணியில்லைஎன் பிறகே வந்த
கள்ளிதனைக் கொண்டஅன்றே குறவனுக்கும்
எனக்கும்இல்லை கஞ்சி தானே.

(தெ - ரை.) வெள்ளிப் பனிமலையாகிய கயிலாயமலைத் தலைவன் சிவபெருமான் மகனாகிய பழனிமலைக்குரிய முருகன், எங்கள் குடும்பத்தில் மணம் செய்துகொண்ட வள்ளியம்மைக் காகக் குறவர்கள் மலையாட்சியைச் சீதனப் பொருளாக வழங்கி னார்கள். அத்தகைய வளமான குறக்குடியில் பிறந்த என் பிள்ளைக்குத் தேய்க்க எண்ணெய் இல்லை; இடுப்பில் கட்டுதற்கு ஒரு துணியும் இல்லை; எனக்குப் பின்னே வந்த இளையவளான

வஞ்சகியைக் கொண்டது முதலே என் கணவனாகிய குறவனுக்கும் எனக்கும் குடிக்கக் கஞ்சிதானும் இல்லை.

(அ - ள்.) வெள்ளிமலை - கயிலாயம்; வெள்ளிமலைக் குறவன் - சிவன்; பழனிமலைக் குறவன் முருகன். குறவன் என்றது குறிஞ்சி(மலை) நில ஆட்சியுடைமை கருதியது. முருகன் குறவர் மகளை மணஞ்செய்து கொண்ட உரிமை கருதிச் சொல்லப்பட்டதுமாம். சீதனம் - பெண்ணுக்கு அவள் பிறந்த வீட்டார் தரும் பொருள். என் பிறகு வந்தவள் என்றது இளையவளை. இலை - இல்லை.

இது தன் குடிப்பெருமையும் தன் குடும்ப நிலையுமாகக் குறத்தி கூறியது.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

21. கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணம்நெல் வேலி
ஏடகம்ஆ டானைதிருக் கானப்பேர் சுழியல்
இராமேசம் திருப்புத்தூர் இவைமுதலாம் தலங்கள்
நாடியெங்கள் அங்கயற்கண் ஆண்டதமிழ்ப் பாண்டி
நன்னாடும் பிறநாடும் என்நாட தாகக்
காடுமலை யும்திரிந்து குறிசொல்லிக் காலம்
கழித்தேன்என் குறவனுக்கும் கஞ்சிவாரா தம்மே.

(தெ - ரை.) அம்மே, என் தலைவனாகிய குறவனுக்குக் கஞ்சி காய்ச்சித் தருதலை விடுத்து மதுரை, திருப்புனவாயில், திருக்கொடுங்குன்றம், திருப்பரங்குன்றம், திருக்குற்றாலம், திருஆப்பனூர், திருப்பூவணம், திருநெல்வேலி, திருவேடகம், திருவாடானை திருக்கானப்பேர், திருச்சுழியல், இராமேச்சுரம், திருப்புத்தூர் ஆகியவை முதலாகிய திருக்கோயில்களை விரும்பி எங்கள் மீனாட்சியம்மை ஆட்சி புரிந்த இனிய பாண்டி நாட்டையும் சேரநாடு, சோழநாடு, தொண்டைநாடு முதலிய நாடுகளையும் என் நாடாக எண்ணிக் காடும் மலையும் அலைந்து குறிசொல்லிப் பொழுது போக்கினேன்.

(அ - ள்.) பாடு புகழ்பெற்ற பாண்டி நாட்டுப் பதினாங்கு திருக்கோயில்களும் இதில் குறிக்கப்படுகின்றன. கொடுங்குன்று - பிரான்

மலே; தான் கணவனுக்குச் செய்யவேண்டிய கடமையை விடுத்து அலேந்ததாகத் தன் குறிசொல்லும் நாட்டத்தை வெளியிட்டாள். நாடி-விரும்பி யடைந்து; பாண்டி நன்ருடும் பிறநாடும் என் நாடதாக'' என்ப தில் ''யாதானும் நாடாமால் ஊராமால்'' என்னும் குறள்கருத்து எளிமையாக ஆளப்பட்டுள்ளது. கஞ்சி வாராது - கஞ்சி ஊற்ருமல்.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

22. பொற்ருெடிவள் ளிக்கிளேய பூங்கொடிஎன் பாட்டி
 பூமகள்மா யவன்மார்பில் பொலிவளென்று சொன்ஞள்;
மற்றவள்பெண் களில்எங்கள் பெரியதாய் கலேமான்
 மலரயனுர் திருநாவில் வாழ்வளென்று சொன்ஞள்;
பெற்றஎங்கள் நற்ருயும் சுந்தரிஇந் திரன்தோள்
 பெறும்என்ருள்; பின்எங்கள் சிறியதாய் அம்மே
சொற்றகுறிக்(கு) அளவிலேஎம் கன்னிமார் அறியச்
 சொன்னேன்பொய் அலநாங்கள் சொன்னதுசொன் னதுவே.

(தெ – ரை.) அம்மே, பொன்வளேயல் பூண்ட வள்ளிக்கு இளேயவளாய்ப் பூங்கொடி போன்றவளாகிய என் பாட்டி, திருமகள் திருமால் மார்பில் விளங்குவாள் என்று குறி சொன்ஞள்; பின் அப் பாட்டியின் பெண்களில் ஒருத்தியாகிய எங்கள் பெரியதாய் கலேமகள் தாமரைமலரில் வீற்றிருக்கும் நான்முகனுர் திருநாவில் வாழ்வாள் என்று சொன்ஞள்; எங்களேப் பெற்ற நல்ல தாயும், இந்திராணி இந்திரன் தோளேச் சேர்வாள் என்று சொன்ஞள்; அதற்குப் பின்னர் எங்கள் சிறிய தாய் சொன்ன குறிக்கு அளவே இல்லே; இச் செய்திகளே நாங்கள் வழிபடும் தெய்வகன்னியர் அறிய மெய்யாகச் சொன்னேன்; பொய் கூறவில்லே; நாங்கள் சொல்லுவன எல்லாம் மெய்யானவையே.

(அ - ள்.) தொடி - வளேயல்; பூமகள் - திருமகள்; மாயவன் - திருமால்; கலேமான் - கலேமகள்; மலர் அயன் - நான்முகன்; சுந்தரி - இந்திராணி; சொற்ற - சொன்ன; சொன்னது சொன்னதுவே - சொல்லியவை மெய்யானவையே.

குறத்தி தன் முன்னேர் கூறிய குறி பொய்யாமையை எடுத்துரைத்தது இது.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

23. முன்னொருநாள் அம்மைதடா தகைபிறந்த நாளின்
முகக்குறிகண்(டு) இவளுலகம் முழுதாளும் என்றேன்;
பின்னொருநாள் கைக்குறிபார்த்(து) அம்மையுனக்(கு) எங்கள்
பிஞ்ஞகர்தாம் மணவாளப் பிள்ளையென்று சொன்னேன்;
அன்னையவள் மெய்க்குறிகள் அனைத்தையும்பார்த்(து) உரைத்தேன்
ஆண்பிள்ளை உண்டுபிறந்(து) அரசாளும் என்றேன்
சொன்னகுறி எல்லாம்என் சொற்படியே பலிக்கும்
தொகுத்துநீ நினைத்தகுறி இனிச்சொலக்கேள் அம்மே.

(தெ - ரை.) அம்மா, தடாதகைப் பிராட்டி பிறந்த பழைய நாளில் அவள் முகக்குறி கண்டு "இவள் உலகம் முழுவதையும் ஆட்சி புரிவாள்" என்று குறி கூறினேன். அதற்குப்பின்னே ஒரு நாளில் அவள் கைக் குறிகளைக்கண்டு, "அம்மையே உனக்கு எங்கள் சிவபெருமானே மணவாளர்" என்று கூறினேன். அதற்குப் பின்னர் ஒருநாள், அவள் உடற்குறிகள் எல்லாவற்றையும் கண்டு, "அம்மா, உனக்கு ஆண் பிள்ளை பிறக்கும்; அப் பிள்ளை ஆட்சி செய்யும்" என்றேன். இவ்வாறு நான் சொன்ன குறிகள் எல்லாம் என் சொற்படியே பலித்தன. ஆதலால் உனக்குக் கூறும் குறியும் பலித்தல் உண்மை. நீ நினைத்த குறிகள் எல்லாவற்றையும் மொத்தமாக நான் கூறக் கேட்பாயாக.

(அ - வி.) தடாதகை - இறைவி, மலயத்துவச பாண்டியன் மகளாகப் பிறந்து பெற்ற பெயர். பிஞ்ஞகர் - சிவபெருமான்; அவர் சௌந்தர பாண்டியனாக வந்து தடாதகையை மணங்கொண்டார்; அவர் பிள்ளை உக்கிர குமார பாண்டியன்.

இது குறத்தி தன் குறித்திறம் கூறியது.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

24. ஒருகாலம் கஞ்சியும்என் குஞ்சுதலைக்(கு)
எண்ணெயும்ஓர் உடுப்பும் ஈந்தால்
பொருகால வேல்கண்ணாய் மனத்துநீ
நினைத்தஎலாம் புகல்வன் கண்டாய்

வருகாலம் நிகழ்காலம் கழிகாலம்
மூன்றும்ஒக்க வகுத்துப் பார்த்துத்
தருங்காலம் தெரிந்துரைப்ப(து) எளிதரிதன்(று)
எங்கள்குறச் சாதிக்(கு) அம்மே.

(தெ - ரை.) அம்மே, தாக்குதற்கு வரும் காலன் போன்ற வேல் வடிவக் கண்ணுடையாய், ஒரு வேளைக்குக் கஞ்சியும் என் குழந்தை தலைக்கு எண்ணெயும் ஓர் உடையும் தந்தால் நீ மனத்தில் நினைத்தவற்றையெல்லாம் கூறுவேன்; எதிர்காலம் நிகழ்காலம் கடந்தகாலம் ஆகிய முக்காலங்களையும் செவ்வையாக ஆராய்ந்து பார்த்து நன்மைதருங் காலம் தேர்ந்து உரைப்பது எங்கள் குறச் சாதிக்கு எளிது; அரியது அன்று.

(அ - வி.) ஒருகாலம் கஞ்சி - ஒரு வேளைக்கு ஆகும் கஞ்சி; குஞ்சு - குழந்தை; குழந்தையைக் குஞ்சு, குட்டி என்பன வழக்கு. பொரு - போரிடும். எலாம் - எல்லாம்; குறத்தி, "முக்காலமும் அறிந்து குறி கூறும் முறைமை குறவர்க்கு எளிது அரிதன்று" என்பதால் தங்களின் பெருமை யுரைத்தாள்.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

25. குங்குமம்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையும் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனில் பிள்ளையார் வைத்துப்
பொங்குநறு மலர்அறுகோ(டு) ஐங்கரர்க்குச் சாத்திப்
புழுகுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக்(கு) அரசிளங்கள் அங்கயற்கண் அமுதை
மனத்துள்வைத்து நினைத்தகுறி இனிச்சொலக்கேள் அம்மே.

(தெ - ரை.) அம்மே, செஞ்சாந்தைச் சந்தனக் குழம்புடன் குழைத்துத் தரையை மெழுகிக் கோலமிட்டுக் குங்குலியப் பொடியைக் கனலில் இட்டு நறும்புகை காட்டிச் சிறந்த பொன் முதலான ஒன்பான் மணிகளை நான்கு திசைகளிலும் பரப்பித் தென்மேற்கு மூலையில் பிள்ளையார் வைத்து மணமிக்க நல்ல மலர்களை அறுகம்

புல்லுடன் அப் பிள்ளையார்க்குச் சாத்தி, புனுகும் நெய்யும் கலந்து விட்டப்பெற்ற விளக்கேற்றி, நிறைநாழி வைத்து மங்கையருக்கு அரசி யாகிய எங்கள் மீனாட்சியம்மையை மனத்துக் கொண்டு நீ நினைத்த குறியை நான் இனிச் சொல்லக் கேட்பாயாக.

(அ - வி.) கனகம் - பொன்; ஐங்கரர் - பிள்ளையார்;

குறிக்களம் அமைப்பும் குறிகேட்பார் அமைதியும் கூறிபது இது.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

26. மூந்நாழி முச்சிறங்கை நெல்அளந்து கொடுவா;
முறத்தில்ஒரு படிநெல்லை முன்னேவை அம்மே;
இந்நாழி நெல்லையும்முக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட எண்ணினபோ(து) ஒற்றைபட்ட தம்மே;
உன்னுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந்(து) உதித்தார்;
உனக்கினியெண் ணினகருமம் இமைப்பினில் கைகூடும்;
என்னுணை எங்கள்குலக் கன்னிமார் அறிய
எக்குறிதப் பினும்தப்பா(து) இக்குறிகாண் அம்மே.

(தெ - ரை.) அம்மே, மூன்றுநாழி மூன்றுகை நெல்லை அளந்து கொண்டுவா; சுளகில் ஒரு நாழி நெல்லைக் கொண்டு வந்து முன்னே வை; இந்த ஒரு நாழி நெலலையும் மூன்று பங்கு வைத்து ஒரு பங்கு நெல்லை இரண்டு இரண்டாக எண்ணு. அவ்வாறு எண்ணியபோது ஒற்றைப்பட வந்தது. நினைக்கு முன்னர், வேள்விமலைப் பிள்ளையார் வந்து தோன்றினர். ஆதலால் உனக்கு இப்பொழுதே நீ நினைத்த செயல் நொடிப்பொழுதில் நிறைவேறும். என் தலைமேல் ஆணை; எங்கள் குலத்தார் வணங்கும் கன்னியர் அறிய எந்தக் குறி தவறினும் இந்தக் குறி தவறாது; அறிவாயாக.

(அ - வி.) நாழி - ஒரு முகத்தலளவை; சிறங்கை (சிறுஅங்கை) சிறிய உள்ளங்கை அளவு; கொடு - கொண்டு; கூறு - பங்கு; உன்னு முன் - நினையாத முன்னே; இமைப்பு - இமைப் பொழுது; காண்-அறிக.

இதனால் குறிபார்க்கும் முறைமை அறியலாம்.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

27. நெல்லளந் திட்ட போது
நிமித்தநன்(று) இடத்தெ ழுந்த
பல்லியும் வரத்தே சொல்லும்;
பத்தினிப் பெண்கள் வாயால்
சொல்லிய வாய்ச்சொல் அன்றித்
தும்மலும் நல்ல தேகாண்;
அல்லது கிளைகூட் டும்புற்(று)
ஆந்தைவீச்(சு) அழகி(து) அம்மே.

(தெ - ரை.) அம்மா, நெல்லை அளந்து படைத்தபோது சோகினம் (சகுனம்) நன்று; இடப்பக்கத்தே எழுந்த பல்லி ஒலியும் நன்மை வருவதையே உரைக்கும்; பத்தினிப் பெண்கள் தங்கள் வாயால் சொல்லிய உரையே அன்றி அவர்கள் தும்மிய தும்மலும் நன்மைக்கு அறிகுறியேயாம்; இவற்றை அன்றித் தன் இனத்தை அழைக்கும் புற்றின்மேல் உள்ள ஆந்தையின் ஒலியும் நன்மையான தேயாம்.

(அ - வி.) நிமித்தம் - சோகினம்; இதனைச் சகுனம் என்பர். வாயால் சொல்லுதலை விரிச்சி என்பர்; அசரீரி என்பதும் அது. உடல் தோன்றாமல் ஒலிமட்டும் வெளிப்படுவது (அ+சரீரி). வீச்சு - ஒலி.

நல்ல குறிகள் இவையென நவில்கின்றது இது.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

28. கொண்டுவா அம்மேகை கொண்டுவா அம்மே;
கொழுங்கனக நவமணிகள் அளைந்திடும்உன் கையே;
வண்டுசுலா மலர்கொய்ய வருந்திடும்உன் கையே;
வருந்தினர்க்கு நவநிதியும் சொரிந்திடும்உன் கையே;
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடும்உன் கையே;
புழுகுறுநெய்ச் சொக்கர்புயம் தழுவிடும்உன் கையே;
அண்டர்தம்நா யகிஎங்கள் மதுரைநா யகியை
அங்கயற்கண் நாயகியைக் கும்பிடும்உன் கையே.

(தெ - ரை) அம்மே, உன் கையைக் கொண்டு வருவாயாக; சிறந்த பொன் முதலிய ஒன்பான் மணிகளும் அள்ளிமகிழும் உன்கை; வண்டுகள் மொய்த்துச் சுழலும் மலர் பறிக்கவும் வருந்தும் மென்மையினது உன்கை; வருந்தி வந்தவர்க்கு ஒன்பான் மணிகளும் அள்ளி வழங்கும் உன்கை; தாமரைபோல் மலர்ந்து அழகு விளங்கும் உன்கை; நறுமண நெய்யின் மணம் கமழும் சொக்கநாதர் தோளைத் தழுவி இன்புறும் உன்கை; தேவர்களுக்குத் தலைவியாகிய எங்கள் மதுரைத் தலைவியாம் மீனாட்சியம்மையைக் கும்பிடும் உன்கை.

(அ - ள்.) அளைதல் - அள்ளி எடுத்கல்; என்றது செல்வப் பெருக்கை உரைத்தது; வண்டு சுலா மலர் - வண்டு சுழலும் (மொய்க்கும்) மலர்; வருந்தினர் - இல்லாமையால் வருந்தியவர்; புண்டரிகம் - தாமரை; புழுகு உறுநெய் - செஞ்சாந்து கலந்த நெய்; அண்டர்-தேவர்.

இது தலைவியின் கையருமை கூறியது.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

29. அம்மேநின் செங்கையைநின் கொங்கையில் வைத்ததுதான்
அபிடேகச் சொக்கருனை அணைவரென்ற குறிகாண்;
இம்மேலைத் திசையினிற்கை எடுத்ததுவும் அவர்தாம்
இன்றந்திப் பொழுதினில்வந்(து) எய்துவரென் றதுகாண்;
கைம்மேல்கை கட்டியதும் தப்பாமல் உனக்குக்
கைகூடும் நீநினைத்த காரியம்என் றதுகாண்;
செம்மேனி மணிவயிற்றில் கைவைத்த(து) இனிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே.

(தெ - ரை.) அம்மே, உன் சிவந்த கையை உன் மார்பில் வைத்தாய்; இது வழிபாட்டுக்குரிய சொக்கநாதர் உன்னை வந்து கூடுவார் என்பதை அறிவிக்கும் அடையாளம் என்பதை அறிவாயாக; இந்த மேற்குத் திசையில் நீ கையை எடுத்தாய் (தூக்கினாய்); இஃது அச் சொக்கநாதர் இன்று மாலைப் பொழுதில் உன்னிடம் வந்து சேர்வார் என்பதற்கு அடையாளம் என்பதை அறிவாயாக; உன் கையின்மேல் கையைக் கட்டிக்கொண்டது நீ நினைத்தது

தப்பாமல் நிறைவேறும் என்பதற்குரிய அடையாளம் என்பதை அறிவாயாக; நின் சிவந்த திருவுடலின் அழகிய வயிற்றில் நீ கையை வைத்தது இனிச் சிறுவர் பதினறுபேர் பெறுவாய் என்பதற்குரிய அடையாளமென அறிவாயாக.

(அ - ள்.) கொங்கை - மார்பு; அபிடேகம் - வழிபாடு; திகை - திசை; அந்தி - மாலை; மணி - அழகு; சிறுவர் பதினறுவர் என்பது 'பதினறுபேறு' என்பது மக்கள் பதினறுபேரையும் குறிக்கும் என்பதற்கு ஒரு சான்று.

இது தலைவியின் கைக்குறி கண்டு கூறிய குறி.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

30. அங்கைத் தலத்துத் தனரேகை
அளவில் செல்வம் தரும்உனது
செங்கைத் துடிதென் மதுரேசர்
செம்பொற் புயத்தில் சேர்க்குமால்;
இங்கிப் படிபுத் திரரேகை
எவர்க்கும் இலைஇப் படிதோளில்
தங்கும் மறுஅங் கயற்கணம்மை
தன்னே டிருக்கத் தரும்அம்மே.

(தெ - ரை.) அம்மே, உன் அழகிய கையிடத்து அமைந்த செல்வரேகை அளவற்ற செல்வம் உண்டு என்பதைக் குறிக்கும். உனது சிவந்த கையின் துடிப்பு, அழகிய சொக்கநாதரின் சிவந்த பொன் போன்ற திருத் தோளில் சேர்வாய் என்பதைக் காட்டும்; உனக்கு இக் கையில் இருப்பது போலப் புதல்வரைக் காட்டும் வரிகள் எவர்க்கும் வாய்த்தன இல்லை; இவ்வாறு அழகாகத் தோளில் விளங்கும் மறு (மச்சம்) மீனுட்சியம்மையுடன் இருக்கும் பேற்றைத் தரும்.

(அ - ள்.) அங்கை (அம்+கை) - அழகிய கை; அங்கை (அகம்+கை) உள்ளங்கை; தலம் - இடம்; தனரேகை, புத்திரரேகை என்பன ரேகை வகைகள்; துடி - துடிப்பு; இலை - இல்லை; அம்மை தன்னேடு இருத்தல், இறைவரால் விரும்பப் படுதல் குறித்தது.

இது ரேகையும் துடிப்பும் மறுவும் கொண்டு கூறிய குறி.

சிந்து

31. பொன்பொதியும் துகிலெனவெண்
புயலொடுதண் பனிமூடும்
தென்பொதிய மலையாட்டி
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) பொன்னை மூடிவைத்த வெண்பட்டாடை என்னுமாறு வெண்ணிற மேகத்துடன் தண்ணிய பனிமூடிக் கிடக்கும் அழகிய பொதிய மலையாளும் பெருமகளின் பேரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - ர்.) பொன் - (இவண்) வெண்பொன்னும் வெள்ளி; வெண் புயல் என்பதை நோக்குக. துகில் - மெல்லிய ஆடை; "நான்பாட, பேரைச் சொல்லாய்" என இயைக்க.

இது முதல் நான்முடிய மீனாட்சியம்மையின் புகழ் கூறுவது.

32. பலநதிகள் புணர்ந்தநதி
பதியைஅணை யாதவைகைக்
குலநதித்தண் டுறைச்செல்வி
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) பல ஆறுகளும் கூடும் கடலை அடையாத வையையாம் ஆற்றையும், குளிர்ந்த நீர்த்துறைகளையும் உடைய செல்வியைப் பாடுதற்குப் பேரைச் சொல்வாயாக.

(அ - ர்.) புணர்ந்த - கூடிய; நதிபதி - கடல்; அணையாத-அடையாத; குலநதி - சிறந்தநதி.

33. அன்பாண்டு கல்வலிதென்(று)
அவ்வைபா டியஎங்கள்
தென்பாண்டி நாட்டாள்தன்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) அன்புமிகக் கொண்டு 'கல்வலிது' என்று ஔவைப் பெருமாட்டியார் பாடிய பாடலைக் கொண்ட எங்கள்

அழகிய பாண்டி நாட்டு அரசியின் பேரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - வி.) அன்பாண்டு (அன்பு ஆண்டு) - அன்பு கொண்டு; "வஞ்சி வெளிய" என்னும் தனிப் பாடலில், "பஞ்சவன் தன் நான்மாடக் கூடலில் கல்வலிது" என்று பாடப் பெற்றுள்ளது. தென்-அழகு; இனிமையுமாம்.

34. பொன்மாடம் சூழ்ந்தகரும்
புயல்அமலன் போர்வை நிகர்
பன்மாடக் கூடலாள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) பொன் மாடங்களைச் சூழ்ந்த கருமேகம், இறைவன் போர்த்திய யானையுரியாம் போர்வை போல விளங்கும் பன்மாடக் கூடலாம் மதுரை இறைவியின் பெயரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - வி.) புயல் - மேகம்; அமலன் - இறைவன்; நிகர் - ஒப்பு; பன்மாடக் கூடல் - மதுரைக்கு ஒரு பெயர்.

35. எண்திசைக்கும் வேம்பாய்எம்
இறையவர்க்குக் கரும்பாகும்
வண்டிசைக்கும் தாரினாள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) எட்டுத் திசைகளிலும் உள்ளவர்க்கும் வேம்பாக இருந்து எம் இறைவராம் சிவபெருமானுக்குக் கரும்பாக இருக்கும், வண்டுகள் பாடும் மாலையணிந்த மீனாட்சியம்மையின் பேரைச் சொல் வாய் நான் பாடுதற்கு.

(அ - வி.) வேம்பு - கசப்பு; கரும்பு - இனிப்பு; சுவைப்பொருள் சுவைத் தன்மையைக் குறித்து நின்றது. தார் - மாலை. வேம்பு கரும்பு என்பன முரண்சுவை தருவன.

36. தினவட்டம் இடும்பருதித்
திண்பரிமண் பரியாக்கும்

கனவட்ட வாம்பரியாள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) நாள்தோறும் வட்டமிடும் கதிரோனின் வலிய குதிரைகளை மண் குதிரைகள் என்னும்படி தூசி பரக்க விரைந்து செல்லும் கனவட்டம் என்னும் தாவும் குதிரையை உடைய பாண்டி மாதேவியின் பேரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - ள்.) பருதி - கதிரோன்; பரி - குதிரை; கனவட்டம் - பாண்டியன் குதிரையின் பெயர். மண் தூசி படுதலால் மண் பரிகள் என்னும் படியாயின பருதிப் பரிகள் என்க. இஃது உயர்வு நவிற்சியணி.

37. திக்கயங்கள் புறங்கொடுப்பத்
திசையெட்டும் திறைகொண்ட
கைக்கயத்தை மேற்கொண்டாள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) திசை யானைகள் புறங்கொடுத்து ஓடுமாறு எட்டுத் திசைகளிலும் வெற்றிக் கொடி நாட்டிக் கப்பங்கொண்ட வலிய கையையுடைய யானையை மேலேறிச் செலுத்துபவள் ஆகிய மீனாட்சியின் பெயரைச் சொல்லாய் நான்பாடுதற்கு.

(அ - ள்.) திக்கு + கயங்கள் - திக்கயங்கள்; திசை யானைகள்; கைக்கயம் - கையையுடைய யானை.

38. ஆன்ஏற்றுங் கொடியானை
ஐங்கணையான் வென்றிடஅம்
மீன்ஏற்றின் கொடியுயர்த்தாள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) காளையைத் தன்னிடத்துக் கொண்ட கொடியினனாகிய சிவபெருமானை ஐந்து கணையுடைய மன்மதன் வெற்றி கொள்ள, அந்த மகரமீன் கொடியை உயர்த்தியவளாகிய மீனாட்சியின் பேரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - ள்.) ஆன் - இடபம் (காளை.) ஐங்கணையான் - மன்மதன். அவன் கணைகள்: தாமரை, மா, அசோகு, முல்லை, குவளை என்பன. மீன்ஏறு - மகரமீன்.

39. இனிஆணை இலைஅரசர்க்(கு)
என்றுதிசை எட்டுமொரு
தனிஆணை செலுத்தினுள்
பேரைச்சொல்லாய் பாடநான்.

(தெ - ரை.) இனி மற்றை அரசர்க்கு ஆணையிடும் திறம் இல்லை என்று எட்டுத் திக்கிலும் ஒப்பற்ற தனி ஆணை செலுத்திய வளாகிய மீனாட்சியின் பேரைச் சொல்வாயாக நான் பாடுதற்கு.

(அ - ன்.) ஆணை - கட்டளை; ஒரு தனி ஆணை - ஒப்பற்ற ஆணை. ஒரு தனி: ஒரு பொருட் பன்மொழி.

40. கருமலையச் செருமலையும்
கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசன்அருள்
மடக்கொடியைப் பாடுவனே.

(தெ - ரை.) கருக்கலங்குமாறு போர் புரியும் யானைகளை யுடைய அரசர் வணங்குமாறு வரும் மலயத்துவச பாண்டியன் அருளிய மென்கொடி போன்றவளாகிய மீனாட்சியை யான் பாடுவேன்.

(அ - ன்.) கருமலைய - கருக்கலங்க; செரு மலையும் - போர் புரியும்; கைம்மலை - யானை; மலயத்துவசன் - பாண்டிய வேந்தன். மடக்கொடி - மெல்லிய கொடி.

41. விண்புரக்கும் கதிர்மெளலி
முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கும் அபிடேக
வல்லியைநான் பாடுவனே.

(தெ - ரை.) விண்ணை அளவும் ஒளியுடைய திருமுடியைச் சூடி வெண்கொற்றக் குடைக்கீழ் இருந்து மண்ணுலகை ஆட்சி புரியும் மீனாட்சியம்மையை நான் பாடுவேன்.

(அ - ள்.) புரக்கும் - காக்கும்; மௌலி - முடி; மௌலிமுடி என்றது ஒரு பொருள் பன்மொழி. அபிடேகம் - திருமுழுக்கு; ஈண்டுப் பட்டாபிடேகம் கொண்ட அரசி என்பதைச் சுட்டியது.

42. வெம்புருவச் சிலைகுனித்து
விழிக்கணைகள் இரண்டெந்தை
மொய்ம்புருவத் தொடுத்தெய்த
மொய்குழலைப் பாடுவனே.

(தெ - ரை.) விரும்பத் தக்க புருவமாகிய வில்லை வளைத்து விழியாகிய் கணைகள் இரண்டை எம் தந்தையாம் சிவபெருமான் தோளை உருவிச் செல்லுமாறு தொடுத்து எய்த திரண்ட கூந்தலுடைய அம்மையைப் பாடுவேன்.

(அ - ள்.) வெம் - விருப்பம்; சிலை - வில்; எந்தை - எம் தந்தை; மொய்ம்பு-தோள்; மொய்குழல் - திரண்டகுழல்; வண்டுகள் மொய்க்கும் குழல் என்றுமாம். குழல் - கூந்தல்.

43. ஊன்கொண்ட முடைத்தலையில்
பலிகொண்டார்க்(கு) உலகேழும்
தான்கொண்ட அரசாட்சி
தந்தாளைப் பாடுவனே.

(தெ - ரை.) ஊன் ஒழுகும் நாற்றமுடைய தலை ஓட்டில் பிச்சை கொண்ட பெருமானும் சிவபெருமானுக்கு, ஏழுலகும் தான் கொண்ட ஆட்சியைத் தந்த அம்மையைப் பாடுவேன்.

(அ - ள்.) முடை - நாற்றம்; பலி - பிச்சை.

44. வானவர்கோன் முடிசிதறி
வடவரையில் கயல்எழுது
மீனவர்கோன் தனைப்பயந்த
மெல்லியலைப் பாடுவனே.

(தெ - ரை.) தேவர் கோமானின் (இந்திரனின்) முடியைச் சிதறச் செய்து இமயமலையில் மீன் பொறியைப் பொறிக்கும்

பாண்டியனும் உக்கிர குமாரனைப் பெற்றெடுத்த தடாதகையாம் அம்மையைப் பாடுவேன்.

(அ - ள்.) வானவர்கோன் - இந்திரன்; வடவரை - வடக்கே உள்ள மலை; கயல் - மீன்; மீனவர் - பாண்டியர்; பயந்த - பெற்ற.

45. கான்மணக்கும் சடைக்காட்டில்
கவின்மணக்கும் கடிக்கொன்றைத்
தேன்மணக்கும் பிறைநாறும்
சிறடியைப் பாடுவனே.

(தெ - ரை.) நறுமணம் கமழும் சடைத் தொகுதியில் அழகு விளங்கும் நறுமணக் கொன்றை மலரின் தேன் பரவும் திங்கள் பிறையின் மணம் விளங்கும் சிறிய அடியையுடைய பெருமாட்டியைப் பாடுவேன்.

(அ - ள்.) கான் - மணம்; காடு - தொகுதி; கவின் - அழகு; கடி - மணம்; சிறடி - சிறுஅடி. இஃது உமைகொண்ட ஊடலைத் தணிக்க இறைவர் வீழ்ந்து வணங்கியமையால் அவர் திருமுடி அம்மை திருவடியில் பட்டமை குறித்து மொழிந்தது.

46. எவ்விடத்தும் தாமாகி
இருந்தவருக்(கு) அருந்தவரும்
வெவ்விடத்தை அமுதாக்கும்
விரைக்கொடியைப் பாடுவனே.

(தெ - ரை.) எங்கும் தாமாக இருந்தவராம் சிவபெருமானுக்கு அருந்துவதற்காக வந்த கொடிய நஞ்சை அமுதாக்கித் தந்த மண மிக்க பூங்கொடி போன்றவளாம் அம்மையைப் பாடுவேன்.

(அ - ள்.) வெவ்விடம் - கொடிய நஞ்சு; விரை - மணம்; இறைவன் நஞ்சுண்டபோது அது கண்டத்தளவில் நிற்க நிறுத்தியவள் அம்மை என்பது கொண்டு கூறியது. 'நஞ்சை அமுதாக்கும்' என்றது நயம்.

47. வைத்தபகி ரண்டமெனும்
மணற்சிற்றில் இழைத்திழைத்தோர்
பித்தனுடன் விளையாடும்
பெய்வளையைப் பாடுவனே.

(தெ - ரை.) அடுக்கப்பட்ட அண்டங்களாகிய மணற்சிறு வீடுகளைக் கட்டிக் கட்டிப் பெருமானுடன் விளையாடும் பலவாகப் பெய்த வளையல் அணிந்த அம்மையைப் பாடுவேன்.

(அ - ள்.) பகிரண்டம்-பேரண்டம்; சிற்றில் - சிறுவீடு; இழைத்து-கட்டி; பித்தன் - சிவபெருமான். அண்டமும் பகிரண்டமும் படைத்தல் இறைவன் இறைவியர்க்குச் சிறுவீடு கட்டும் சிறுவிளையாட்டு என்றது இது.

48. இலக்குறியும் குணமுநமக்(கு)
என்பார்க்கு வளைக்குறியும்
முலைக்குறியும் அணிந்திட்ட
மொய்குழலைப் பாடுவனே.

(தெ - ரை.) வடிவும் குணமும் நமக்கு இல்லை என்பவராகிய இறைவர்க்கு வளையல் குறியும் மார்புக் குறியும் பதித்த திரண்ட கூந்தல் உடையவளைப் பாடுவேன்.

(அ - ள்.) இலை என்பதைக், 'குறி' 'குணம்' இரண்டற்கும் கூட்டுக. குறி - பெயருமாம். "ஒருருவம் ஒருநாமம் ஒன்றுமில்லார்" என்றது கருதுக. பதினெண்ரும் பாடலைப் பார்க்க.

49. ஒன்ருகி அனைத்துயிர்க்கும்
உயிராகி எப்பொருளும்
அன்ருகி அவையனைத்தும்
ஆனளைப் பாடுவனே.

(தெ - ரை.) ஒரு பொருளாகியும், எல்லா உயிர்களுக்கும் உயிராகியும் எப்பொருளும் இல்லாததாகியும், எல்லாப் பொருளும் தானுகியும் நிற்கும் இறைவியைப் பாடுவேன்.

(அ - ள்.) அனைத்தும் - எல்லாம். அனைத்தும் ஆனள் - எல்லாமாகியவள்; இறைமை இயல் உரைத்தது இது.

50. பரசிருக்கும் தமிழ்க்கூடல்
பழியஞ்சிச் சொக்கருடன்
அரசிருக்கும் அங்கயற்கண்
ஆரமுதைப் பாடுவனே.

(தெ - ரை.) புகழ் குடிகொண்ட தமிழ் மதுரையில் பழியஞ்சி என்னும் பெயர்கொண்ட சொக்கநாதருடன் இருந்து அரசு செலுத்தும் அங்கயற்கண்ணியாம் அரிய அமுதைப் பாடுவேன்.

(அ - ள்.) பரசு - புகழ்; கூடல் - மதுரை; பழியஞ்சி என்றது இறைவர் பெயருள் ஒன்று. மூன்றும் (5) கூறினர்.

## வாழ்த்து

### கோச்சகக் கலிப்பா

நீர்வாழி தென்மதுரை நின்மலனார் அருள்வாழி
கார்வாழி அங்கயற்கண் கன்னிதிரு அருள்வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர்வாழி அவன்செல்வம் பெரிதூழி வாழியவே.

(தெ – ரை.) நீர் வாழ்க; அழகிய மதுரையில் கோயில் கொண்ட குறையிலா இறைவர் திருவருள் வாழ்க; மழை வாழ்க; அங்கயற்கண் அம்மையின் திருவருள் வாழ்க; சிறந்தவை எல்லாம் வாழ்க; காஞ்சி மாநகர் ஆட்சி புரியும் திருமலை பூபதி என்பான் வாழ்க; அவன் புகழ் வாழ்க; அவன் செல்வம் காலமெல்லாம் வாழ்வதாக.

(அ - ள்.) நின்மலர் - களங்கமில்லாத இறைவர்; கார் - மேகம், மழை; சீர் - சிறப்பு; கச்சி - காஞ்சி; திருமலை பூபதி - வள்ளல் பெயர்; பேர் - பெருமை; ஊழி - நெடியதொரு கால எல்லை.

---

# செய்யுள் முதற் குறிப்பு

[எண்: செய்யுளெண்]



---



# மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை

## நேரிசை வெண்பா

1. கார்பூத்த கண்டத்தெம் கண்ணுதலார்க்(கு) ஈரேழு
   பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே - சீர்கொள்
   கடம்பவனத் தாயேநின் கண்ணருள்பெற் றாரே
   இடம்பவனத் தாயே இரார்.

(தெளிவுரை.) கரு நிறம் அமைந்த கழுத்தையுடைய எம்பெருமானும் சிவனார்க்குப் பதினான்கு உலகங்களையும் படைத்துத் தந்த பச்சைப் பசுங்கொடி போன்றவளே, சிறப்பமைந்த கடம்பு மரம் நிறைந்த மதுரையில் எழுந்தருளிய அன்னையே, நின் திருவருள் பார்வை பெற்ற எவரே தம் இடம் விண்ணுலகமாக இரார். நின் திருவருள் நோக்கம் பெற்ற எவரும் விண்ணுலக இன்பம் பெறுவர் என்பதாம்.

(அருஞ்சொற்பொருள்.) கார் - கருமை, கறை; கார்பூத்த கண்டம் - நீலகண்டம்; நுதல் - நெற்றி; பார் - உலகம்; கடம்பவனம் - மதுரை; இடம்பவனத் தாயே இரார் - இடம் பவனத்து ஆய் ஏ இரார் எனப் பிரித்துப் பொருள் கொள்க. பவனம் - விண்ணுலகம். இறைவன் திருவருட் சக்தியால் உலகைப் படைத்தான் ஆகலின் அச் சக்தியைப் 'பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பு' என்றார்.

## கட்டளைக் கலித்துறை

2. இராநின் றதும்சொக்கர் எண்தோள் குழைய இருகுவட்டால்
   பொராநின் றதும்சில பூசலிட் டோடிப் புலவிநலம்
   தராநின் றதுமம்மை அம்,மண வாளர் தயவுக்குள்ளாய்
   வராநின் றதுமென்று வாய்க்கும்என் நெஞ்சமணவறையே.

(தெ - ரை.) என் நெஞ்சமாகிய மணவறைக்குள், அம்மை இறைவர் கண் பொத்துதலால் உலகெலாம் இருள் உண்டாகி நிலை பெற்றதும் பின்னர் இறைவரின் எட்டுத் தோள்களும் நெகிழுமாறு இருமலைகள் போன்ற மார்புகளால் தழுவிநின்றதும், ஊடல் கொண்டு அகன்றோடி இன்பம் தந்ததும், இறைவர் பேரருளுக்கு உள்ளாகி அமைந்து நின்றதும், நிலைபெறக் கண்டுகொண்டே களிப்புற எப்பொழுது வாய்க்கும்?

(அ - வி.) இரா நின்றது முதலிய இன்ப விளையாடல்கள் சீகாளத்தி புராணம் தழுவக் குழைந்த படலத்தில் கண்டது. இரா - இரவு (இருள்) குவடு - மலை; பொர - போரிட, தழுவ; சில பூசல் - சிறுபூசல் (ஊடல்) சில என்பது சிறுமைப் பொருள் தந்தது. புலவி நலம் - ஊடல் இன்பம். "ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்" என்பது திருக்குறள். மணவாளர் - கணவர்; "என் நெஞ்ச மணவறை என்று வாய்க்கும்" என இயைக்க.

## நேரிசை வெண்பா

3. மதம்பரவு மூக்கண் மழகளிற்றைப் பெற்றுக்
கதம்பவனத் தேயிருந்த கள்வி - மதங்கன்
அடியார்க்(கு) உடம்பிருகூ றாக்கினாள் பார்க்கிற்
கொடியார்க்(கு) இலைகொல் குணம்.

(தெ - ரை.) மதம் பெருகிய மூன்று கண்களையுடைய இளமையான யானையாம் மூத்த பிள்ளையாரைப் பெற்று மாடமதுரையிலே இருந்த உள்ளம் கவரும் கள்வியாகிய மீனாட்சியம்மை, பாணபத்திரர் என்னும் இசைவாணருக்கு அடியாராகிய சிவபெருமானுக்கு உடம்பை இரு கூறுபட ஆக்கினாள்; இதனை ஆராய்ந்து பார்த்தால் கொடிபோன்ற அம்மைக்கு (மகளிர்க்கு) அருட்குணம் இல்லை போலும்.

(அ - வி.) மழ களிறு-இளைய யானை; "மழவும் குழவும் இளமைப் பொருள" என்பது தொல்காப்பியம். கதம்பவனம் - கடம்பவனம். எதுகை நோக்கி 'ட' 'த' வாகத் திரிந்தது. கடம்ப மரங்கள் நிறைந்த காடாக ஒரு காலத்து இருந்தமையால் மதுரைக்கு அஃதொரு பெயர். மதங்கன் - பாடுவான்; அவன் பாணபத்திரன்; பாணபத்திரனுக்கு அடியாராக வந்து இறைவன் அருளியது, திருவிளையாடற்புராணம் விறகு விற்ற படலச் செய்தியாகும்

"பண்தரு விபஞ்சி பாண பத்திரன் அடிமை என்றான்" என்பது இறைவன் அடியாராகியதைச் சுட்டும். (24)

"படிமிசை நடந்து பாடிப் பாணன்தன் விறகாள் ஆகி அடிமையென் றடிமை கொண்ட அருள்திறம்" என்பது விறகுவிற்ற படலத் தொடக்கம்.

அம்மையின் காதல்திறம் கூறுவார் வஞ்சப்புகழ்ச்சியாய் 'கொடியார்க் கிலைகொல் குணம்' என்றார். இது இரட்டுறலால் கொடிபோன்றவர் என்றும் கொடியவர் என்றும் பொருள் தந்தது. கொடிக்கும் இலைக்கும் உள்ள தொடர்பு, சொல்நயம். இனிக் 'கொடியார்க்கு இலை கொல் குணம்' என உண்மையுரைத்தமை உயர்நயம் உடையதாம். கொடியார்க்குக் கொல்லும் குணம் இல்லை என்பதாம்.

கட்டளைக் கலித்துறை

4. குணங்கொண்டு நின்னைக் குறையிரந்(து)
 ஆகம் குழையப்புல்லி
 மணங்கொண் டவரொரு வாமங்கொண்
 டாய்மது ரேசரவர்
 பணங்கொண் டிருப்ப தறிந்துகொள்
 ளாயம்மை பைந்தொடியார்
 கணங்கொண் டிறைஞ்சும் நினக்குமுண்
 டாற்பொற் கனதனமே.

(தெ - ரை.) அம்மையே, காதற்பெருக்குக் கொண்டு நின்னைப் பணிந்து வேண்டி நின் உடல் தளிர்க்குமாறு தழுவி இன்புற்ற இறைவரது ஒரு பாகத்தைப் பற்றிக் கொண்டாய்; அவ் இறைவர் பணத்தைக் கொண்டிருப்பதை அறிந்துகொள்ளாய்; பசுமையான வளையல் அணிந்த தெய்வமகளிர் கூட்டம் வணங்கி வழிபடத் தக்க நினக்கும் பொன் முதலிய பெருமைக்குரிய செல்வங்கள் உண்டாம்.

(அ - வி.) நின்னிடம் கனதனம் இருப்பதால் இறைவன் பணங் கொண்டிருப்பது அறிந்து கொள்ளாய்' என உலகியல் பொருள் வெளிப் படக் கூறினார். ஆனால் இறைவர் பணம் (பாம்பு) அணிந்திருப்பதும், அம்மை கனதனம் (கனத்த மார்பு) கொண்டிருப்பதும் உட்பொருள் களாம்.

ஆகம் - உடல், மார்பு; புல்லி - தழுவி; மணங்கொண்டவர் - இறைவர்; வாமம் - பாகம்; பணம் - பாம்பு, செல்வம்; தொடி - வளையல்; கணம் - கூட்டம்; கனதனம் - கனத்த மார்பு, பெருஞ்செல்வம்.

## நேரிசை வெண்பா

5. கனமிருக்கும் கந்தரர்க்குன் கன்னிநா(டு) ஈந்தென்?
தினமிரப்ப தோவொழியார் தேனே—பனவனுக்காப்
பாமாறி யார்க்குனைப்போற் பாரத் தனமிருந்தால்
தாமாறி யாடுவரோ தான்.

(தெ - ரை.) தேன் போன்ற இனிய அன்னையே, கறை யிருக்கும் கழுத்துடைய பெருமானுக்கு உன் பாண்டி நாட்டு உரிமையை ஈந்ததால் ஆயதென்ன? அவர் நாள்தோறும் பிச்சை யேற்றுத் திரிதலை விடார்; ஓர் அந்தணனுக்காகத் தம் பாடலை விற்றவராகிய இறைவருக்கு உன்னைப் போல் பெருஞ்செல்வம் (பெரிய கொங்கை) இருந்தால் கால்மாறி யாடியிருப்பாரோ? இரார். அவரிடம் பாரத்தனம் இல்லாமையால்தான் கால்மாறி ஆடிக் கொண்டு - கூத்தாடிக் கொண்டு இருக்கிருர் என்பதாம்.

(அ - ள்.) கனம் - மேகம்; இவண் கறை என்பதைக் குறித்தது. கன்னிநாடு - பாண்டி நாடு. தினம் இரத்தல் - இறைவர் பலியேற்றுத் திரிதல். பனவன் - அந்தணன்; அவனுவான் தருமி; இதனைத் தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடல் விரியக் கூறும். இறைவன் மாறி யாடியதைக் 'கால்மாறியாடிய' திருவிளையாடலால் அறியலாம். பாரத்தனம்- பெருஞ்செல்வம், பெரிய மார்பு. செல்வம் இல்லாதார் ஆடிப்பிழைப்பர் என்பது குறிப்பு.

## கட்டளைக் கலித்துறை

6. தானின் றுலகம் தழையத் தழைந்த தமிழ்மதுரைக்
கானின்ற பூங்குழல் கர்ப்பூர வல்லி கருங்கட்செய்ய
மீனின் றுலாவி விளையா டுவதுவிண் ணுறலைய
வானின்ற தோர்வெள்ளி மன்ருடும் ஆனந்த மாக்கடலே.

(தெ - ரை.) தான் நிலைபெறுதலால் உலகம் செழிக்குமாறு செழித்த தமிழ் மதுரையின், மணம் நிலைத்த அழகிய கூந்தலை

யுடைய மீனாட்சியம்மை என்னும் கரிய கண்ணையுடைய செய்ய மீன் நிலையாக உலாவி விளையாடுவது, வானகங்கை அலையுமாறு தெய்வத் தன்மை நிலைத்த வெள்ளியம்பலத்துத் திருக்கூத்தாடும் ஆனந்தப் பெருங்கடலிலேயாம்.

(அ - வி.) தான் - மதுரை; தமிழுமாம்; உலகம் தழையத் தழைந்தமை தமிழுக்கும் மதுரைக்கும் தனித்தனி இயைப்பினும் ஆம். கான் - மணம்; பூ - அழகு, மென்மை, பூ; செய்ய மீன் - செம்மையான மீன்; மீனாட்சி. "மீன் உலாவி விளையாடுவது வெள்ளி மன்றுடும் ஆனந்த மாக்கடல்". விண்ணாறு-வானகங்கை. வெள்ளிமன்று - வெள்ளியம்பலம்; மதுரைத் திருக்கோயிலில் உள்ளது வெள்ளியம்பலம்; இஃது ஐந்து மன்றங்களில் ஒன்று. இப் பாடல் உருவகம்.

## நேரிசை வெண்பா

7. கடம்பவன வல்லிசெல்வக் கர்ப்பூர வல்லி
மடந்தை அபிடேக வல்லி—நெடுந்தகையை
ஆட்டுவிப்பாள் ஆடலிவட்(கு) ஆடல்வே றில்லையெமைப்
பாட்டுவிப்ப தும்கேட் பதும்.

(தெ - ரை.) கடம்பவனக் கொடியும், வளமான கர்ப்பூரக் கொடியும் மங்கை நல்லாளும், திருமுழுக் காட்டப் பெறும் கொடியும் ஆகிய மீனாட்சியம்மை உயர்வற உயர்ந்த குணங்களால் அமைந்தவராகிய சிவபெருமானை ஆடல் ஆடுமாறு செய்வாள்; அன்றியும் எம்மைப் பாடச் செய்வதும் அதனைக் கேட்பதும் அல்லாமல் வேறு ஆடல்களைத் தானும் செய்யாள்.

(அ - வி.) கடம்பவனம் - மதுரை; வல்லி - கொடி; அபிடேகம் - திருமுழுக்கு; நெடுந்தகை - சிவபெருமான்; "வல்லி நெடுந்தகையை ஆடல் ஆட்டுவிப்பாள்; எமைப் பாட்டுவிப்பதும் கேட்பதும் ஆடல்வேறு இவட்கு இல்லை" என இயைக்க.

## கட்டளைக் கலித்துறை

8. பதுமத் திருவல்லி கர்ப்பூர வல்லிநின் பாதபத்ம
மதுமத் தொடும்தம் முடிவைத்த வாமது ரேசரவர்

*

இதுமத்தப் பித்துமன்(று) ஏழைமை முன்னர் இமையவர்கைப்
புதுமத் தினைப்பொற் சிலையென் றெடுத்த புராந்தகர்க்கே.

(தெ - ரை.) தாமரைக் கொடி போன்றவளே, கர்ப்பூரக் கொடி போன்றவளே, நின் திருவடிகளாகிய தாமரை மலர்களை ஊமத்தை யுடன் மதுரைப் பெருமான் தம் முடியில் சூடிக் கொண்டவாறு என்ன? இது மதிமயக்கம் கொண்டமையால் உண்டாகிய பித்தும் அன்று; முன்னாளில் தேவர்கள் கொண்டிருந்த மலையாகிய மத்தினை அழகிய வில்லாக எடுத்து முப்புரங்களை அழித்தவராகிய சிவனார்க்கு இஃது அறியாமையேயாம்.

(அ - வி.) பதுமம் - தாமரை; வல்லி - கொடி; பாதபத்மம் - திருவடித் தாமரை; வைத்தவா - வைத்தவாறு; மத்தம் - ஊமத்தை; மத்தப்பித்த - மதிமயக்கப்பித்து; ஏழைமை - அறியாமை; சிலை - வில்; மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை அழிக்கச் சென்றவர் சிவபெருமான் என்னும் கதையை உட்கொண்டது "மத்தினைப்...புராந் தகர்க்கே" என்பது. புரம் - முப்புரம்; அந்தகர் - அழித்தவர்.

## நேரிசை வெண்பா

9. தருமே கடம்பவனத் தாயேநின் சிற்றில்
அகமேஎன் நெஞ்சகம தானால்—மகிழ்நரொடும்
வாழாநின் றாயிம் மனைஇருள்மூ டிக்கிடப்ப(து)
ஏழாய் விளக்கிட் டிரு.

(தெ - ரை.) மீனாட்சியம்மையே, கணவரொடும் ஒன்றி உறைபவளே, நின் தகுதியுடைய சிறிய மனையே என் மனமாகிய இடமானால், இம் மனை இருள்மூடிக் கிடக்கின்றது; அம்மையே, இதில் விளக்கேற்றி வைத்து இனிது குடியிருப்பாயாக.

(அ - வி.) கடம்பவனம் - மதுரை; சிற்றில் - சிறிய வீடு; அகம் - மனம். 'அகமே தகும் இல்' என இயைக்க. மகிழ்நர் - கணவர்; வாழா நின்றாய் - வாழ்கின்றாய்; ஏழாய் - பெண்ணே, இவண் மீனாட்சியம்மையே என விளி. விளக்கு - மெய்யறிவாகிய - உள்ளொளியாகிய விளக்கு. "உள்ளொளி விளங்கப் பெற்ற உடலமே தெய்வத் திருக்கோயில்" என்க. "ஊனுடம்பு ஆலயம்", "உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டான்" என்னும் சான்றோர் திருமொழி கருதத் தக்கன.

### கட்டளைக் கலித்துறை

10. இரைக்கு நதிவைகை பொய்கைபொற்
றாமரை யீர்ந்தண்டமிழ்
வரைக்கு மலைதென் மலயம
தேசொக்கர் வஞ்சநெஞ்சைக்
கரைக்கும் கனகள்வி கர்ப்பூர
வல்லிக்குக் *கற்பகத்தால்
நிரைக்கும்பொற் கோயில் திருவால
வாயுமென் நெஞ்சமுமே.

(தெ - ரை.) உள்ளங் கவர் கள்வராம் சொக்கரின் காதல் நெஞ்சை உருக்கும் பெரும் கள்வியும் கர்ப்பூரவல்லியும் ஆகிய மீனாட்சியம்மைக்கு முழங்கிச் செல்லும் நதி வையை; விருப்பமிக்க பொய்கை, பொற்றாமரைக் குளம்; மிகக் குளிர்ந்த தமிழை வரையறுத்துக் காட்டும் மலை அழகிய பொதியமலை; பல ஊழிகளில் கலை நலங்களெல்லாம் ஒழுங்காகப் பொருந்த அமைக்கப் பெற்ற அழகிய கோயில் திருவாலவாயும் என் நெஞ்சமுமேயாம்.

(அ - வி.) இரைக்கும் - முழங்கும்; ஈர்ந்தண் தமிழ் - மிகக் குளிர்ந்த தமிழ்; வரை - எல்லை; கனம் - பெரிய; நிரைக்கும் - ஒழுங்குறச் செய்யப் பெறும்; கற்பகத்தார் என்பது பாடமாயின் தேவர்கள் என்பது பொருள். திருவாலவாய் - மதுரைக் கோயிலின் பெயர். பாம்பின் வாயால் எல்லை காணப் பெற்ற இடம் என்னும் காரணப் பொருட்டால் இப் பெயர் பெற்றது என்பது திருவிளையாடற் புராணம் 'திருவாலவாயான படலத்து'க் கண்ட செய்தி. நதி, மலை முதலிய பத்துறுப்புகளுள் (தசாங்கங்களுள்) சில கூறியது இது.

### நேரிசை வெண்பா

11. நெஞ்சே திருக்கோயில் நீயுண் டிருண்டகுழல்
மஞ்சேந்(து) அபிடேக வல்லிக்கு—விஞ்சி
வருமந் தகாஎன் வழிவருதி யாலிக்
கருமந் தகாஎன் கருத்து.

---

*கற்பகத்தார் (பாடவேறுபாடு)

(தெ - ரை.) நீலம் (கருமை) என்னும் நிறத்தை உண்டு இருளையே கவர்ந்து கொண்ட கூந்தலாகிய கருமேகத்தை ஏந்திய மீனாட்சி யம்மைக்கு, என் நெஞ்சமே திருக்கோயிலாகும்; அவ்வாறாகவும் எல்லை கடந்து வரும் கூற்றுவனே என் வழிப்படியே நீயும் வருவாயாக; நீ செய்யும் வன்மச் செயல் தகாது; உன் எண்ணம் தான் எதுவோ? கூறுவாயாக.

(அ - ள்.) நெஞ்சம் திருக்கோயிலாதலை முன்னரும் (9, 10) கூறினார். மேலும் (15, 17, 20) கூறுவார். நீல் - நீலம் என்பதன் தொகுத்தல்; மஞ்சு - மேகம்; விஞ்சி - (எல்லை) கடந்து; அந்தகன் - இயமன்; இக் கருமம் - நீ எல்லை கடந்து வரும் செயல்; தகா - பொருந்தா; என் - என்ன; அந்தகன் மார்க்கண்டன் மேல் வந்து இறைவன் சீற்றத்திற்கு ஆளாகி அல்லலுற்ற கதையைக் கருதுக. இஃதவன்மேல் கொண்ட அருளால் உரைத்ததென்க.

கட்டளைக் கலித்துறை

12. கருவால வாய்நொந்(து) அறமெலிந்
தேற்கிரு *கால்மலரைந்
தருவால வாய்நின்ற(து) ஒன்றுத
வாய்வன் தடக்கைக்குநேர்
பொருவால வாய்எட்டுப் போர்க்களி
றேந்துபொற் கோயில்கொண்ட
திருவால வாய்மருந் தேதென்னர்
கோன்பெற்ற தெள்ளமுதே.

(தெ - ரை.) கரிய பெரிய கையிற்கு ஒப்பாகப் பின்னே தொங்கும் வாலையுடையனவாகிய எட்டு வலிய யானைகளால் தாங்கப் பெறும் அழகிய இந்திர விமானத்தைக் கொண்ட திருவாலவாய்த் திருக்கோயிலில் உறையும் அரிய மருந்தே, பாண்டியன் பெற்ற தெளிந்த அமிழ்தமே, அளவிலா ஆசைகளுக்கு ஆட்படுதலால் பல்வேறு பிறவிகளுக்கு ஆளாகி நொந்து மிக வருந்தும் எனக்குத் திருவடிகளாகிய இரு மலர்களையுடைய ஐந்தருவாகி

*கால்மலரைத் (பாடவேறுபாடு)

ஆலமரத்திினிடத்தே நின்ற ஒப்பற்ற பொருளாகிய சிவத்தை அடைந்து இன்புற உதவுவாயாக.

(அ - ள்.) 'கருவாலவாய்' - அவாய் கருவால் என மாறி இயைக்க. அற - மிக; மெலிந்தேற்கு - மெலிந்த எனக்கு; மெலிவு - துன்பம்; ஐந்தரு வாலவாய்- ஐந்தரு ஆலவாய்; தடக்கை-பெரிய கை; நேர்பொரு- ஒப்பாகிய; வாலவாய் - வாலையுடையனவாய்; எட்டுப்போர்க் களிறு ஏந்து பொற்கோயில் என்றது இந்திர விமானத்தை; அவ் விமானம் எண் திக்கு யானைகள் ஏந்திநிற்குமாப் போன்ற அமைப்புடைமை குறித்தது. தென்னர் கோன் - பாண்டியன்; தெள் அமுது - தெளிந்த அமுது. (மீனாட்சி) தடாதகைப் பிராட்டியாகப் பிறந்தாள் என்பது திருவிளையாடல் புராணம்.

நேரிசை வெண்பா

13. தென்மலையும் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே—நின்மா
முலைக்குவடு பாய்சுவடு முன்காய மால்அம்
மலைக்குவடு அன்றே மணம்.

(தெ - ரை.) வெள்ளிப் பனிமலைமேல் வீற்றிருக்கும் பொன் மலை போன்றவராகிய சிவபெருமானுக்குப் பொதிய மலையையும், பாண்டித் திருநாட்டையும் உரிமையாய் வழங்கிய பொற்பூங்கொடி போன்ற அம்மையே, நின் பெரிய மார்புகளாகிய மலைகள் அழுந்து தலால் பெருமான் மார்பில் காயம் உண்டாயிற்று. ஆனால் அழகிய நின் மார்பாகிய மலைக்குத் தழும்பு உண்டாகவில்லை; திருமணமே கைகூடிற்றும்.

(அ - ள்.) தென்மலை - பொதியமலை; கன்னித் திருநாடு - பாண்டி நாடு; வெள்ளிமலை - கயிலாயம்; பொன்மலை - (செம்பொன் நிறமுடைய வராகிய சிவபெருமான்; பொலம் - அழகு, பொன்; குவடு - மலை; சுவடு - தடம்; வடு - தழும்பு. "முலைக்குவடு பாய்சுவடு...மணம்" என்பது காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த படலத்தில் விரித்துக் கூறப்பெறும் செய்தியாகும். இதனை முன்னரும் (2) குறித்தார்.

கட்டளைக் கலித்துறை

14. மணியே ஒருபச்சை மாணிக்க மேமருந் தேயென்றுன்னைப்
பணியேன் பணிந்தவர் பாலுஞ்செல் லேனவர் பாற்செலவும்

துணியேன் துணிந்ததை என்னுரைக் கேன்மது ரைத்திருநாட்
டணியே அனைத்துயிர்க் கும்அனை நீஎன் றறிந்துகொண்டே.

(தெ - ரை.) மதுரைத் திருநாட்டின் அணிகலமாக அமைந்தவளே, எல்லா உயிர்களுக்கும் அன்னையாவாய் நீயே என்பதை நான் அறிந்திருந்தும், உன்னைக் கருமணியே என்றும் ஒப்பற்ற பசுமையான மாணிக்கமே என்றும் அரிய அமிழ்தமே என்றும் பாடிப் பணியேன்; நின்னைப் பணிகின்ற பழ்வடியார் திருக்கூட்டத்தும் செல்லேன்; அவ்விடத்துச் செல்லுதற்கும் நினைவு கொள்ளேன்; யான் நினைத்த தீயவற்றை எல்லாம் எவ்வாறு சொல்லவல்லேன்.

(அ - ன்.) மணி - கண்மணி, கருமணி; மருந்து - அமிழ்து; பிறவிப் பிணிக்கு மருந்து போன்றவளுமாம்; என் உரைக்கேன் - என்ன சொல்வேன்; அனை - அன்னை; "அனை நீ என்று அறிந்து கொண்டும் பணியேன்; செல்லேன்; துணியேன்; என்னுரைக்கேன்" - என முடிக்க.

## நேரிசை வெண்பா

15. கொண்டைச் செருக்கும் குருநகையும் நெட்டயிற்கண்
கெண்டைப் பிறக்கமும் வாய்க்கிஞ்சுகமும்—கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப் புகுந்தாள்
நற்பூர வல்லியுமென் நா.

(தெ - ரை.) திருக்கூந்தல் பெருமிதமும், ஒளிமிக்க புன்முறுவலும், நெடிய வேல் போன்றதும் கெண்டைமீன் போன்றதுமாகிய கண்ணின் ஒளியும், வாயாகிய முள் முருங்கை மலரும் கொண்டவளாகிய மீனாட்சியம்மை என் உள்ளத்தில் புகுந்த அளவில், நலமிக்க பூரவல்லி என்னும் பெயருடைய கலைமகளும் என் நாவில் புகுந்தாள்.

(அ - ன்.) செருக்கு - பெருமிதம்; குருநகை - ஒளியுடைய பல்; இவண், நகை புன்முறுவலிப்பைக் குறித்தது; அயில் - வேல்; பிறக்கம் - ஒளி; கிஞ்சுகம் - முள்முருங்கை; அம்மைபுக, பூரவல்லியும் என்நா புகுந்தாள் என இயைக்க. இறைவியின் திருவருளால் கல்வியும் நிரம்பும் என்பது கருத்தாம்; கொண்ட அம்மை என்பது 'கொண்டம்மை' எனத் தொக்குநின்றது.

## கட்டளைக் கலித்துறை

16. நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமிழ் உண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண் டேபங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்கும் கடம்பா டவிப்பசுந் தேனின்பைந்தாள்
பூவுண்டு நாரொன் றிலையாம் தொடுத்துப் புனைவதற்கே.

(தெ - ரை.) எமக்கு நாவுண்டு; நல்ல நெஞ்சும் உண்டு; நயமிக்க தமிழும் உண்டு; விருப்பமிக்க சில பாவகைகளும் உண்டு; பாவினங்கள் பலவும் உண்டு; தன் உடலில் பங்குதந்து இருக்கும் தெய்வத்துடன் மகிழ்ந்திருக்கும் கடம்பவனத்து வளமிக்க தேனாகிய மீனாட்சியம்மையின் தண்மையான திருவடிகளாகிய தாமரைப் பூக்களும் உண்டு; ஆனால், அம் மலர்களைத் தொடுத்துச் சூடுதற் குரியதாம் அன்பு எனப்பெறும் நார் ஒன்று மட்டும் எம்மிடம் இல்லையாம்.

(அ - வி.) பா - பாட்டு; அவை வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. இனி, இசைத்தமிழ்ப் பாக்களுமாம். இனங்கள் - பா வினங்கள்; அவை தாழிசை, துறை, விருத்தம் என்பனவும் கண்ணிகளும், சிந்துகளும் பிறவுமாம். பங்கிற் கொண்டு இருந்ததே - உமை ஒரு பாகராம் சிவபெருமான்; கடம்பாடவி - கடம்பவனம்; பசுந்தேன் - மீனாட்சியம்மை; நார் - அன்புக்கும் தொடுக்கும் நாருக்கும் இரட்டுறல். "புனைய நார் இலையாம்" என இயைக்க.

## நேரிசை வெண்பா

17. புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பாவை
வனைந்தாளெம் வாயும் மனமும்—தினம்தினமும்
பொற்பதமே நாறுமவள்* பூம்பதமன் றேநமது
சொற்பதமே நாறும் சுவை.

(தெ - ரை.) கடம்பவனத் துறையும் அம்மை, யாம் பாடிய சிலவகைப் பாக்களைப் பரிவுடன் ஏற்றுப் புனைந்தருளினாள்; எம் வாயையும் மனத்தையும் இடமாகக் கொண்டு அழகு செய்தாள்;

---

* பூம்பத மென்றே (பாடவேறுபாடு)

நாள்தோறும் அவள் திருவடித் தாமரைகள் பொன்னுலக இன்ப மணத்தையே பரப்புவனவாம்; அவளைப் பாடி மகிழும் நம் சொல்லாகிய பதங்களே நறுஞ்சுவை பரப்புவனவாம்.

(அ - ள்.) புனைந்தாள் - சூடினாள்; பூவை - பெண்; நாகணவாய்ப் பறவை போன்றவளுமாம்; வனைந்தாள் - அழகு செய்தாள்; தினம் தினம் - நாள்தோறும்; பொற்பதம் - பொன்னுலக இன்பம்; நாறும் - மணக்கும்; பூம்பதம் - பூப்போன்ற திருவடி; அன்று, ஏ: அசைநிலைகள்; சொற்பதம் - சொல்லாகிய பதம்; இஃது ஒரு பொருள் பன்மொழி. பூவையைப் பாடுதலால் தம் பாவை மணமிக்கதாகக் குறித்தார்.

### கட்டளைக் கலித்துறை

18. சுவையுண் டெனக்கொண்டு சூடுதி
யால்மற்றென் சொற்றமிழ்க்கோர்
நவையுண் டெனவற நாணுதி
போலு நகைத்தெயின்மூன்(று)
அவையுண் டவபொரருட்கூடல் வைகுமம்
மேசொற் பொருட்கு
எவையுண்டு குற்ற மவையுண்டு
நீவிர் இருவிர்க்குமே.

(தெ - ரை.) நகைத்தலால் முப்புரங்களை எரித்து அழித்தவராகிய முக்கட் பெருமானின் ஒப்பற்ற திருவருள் வாய்ந்த மதுரை மாநகரில் கோயில் கொண்டுள்ள அம்மையே, யான் பாடும் தமிழ்ப் பாவில் ஒரு குற்றமுண்டெனக் கொண்டு ஏற்பதற்கு நாணுகின்றனை போலும்; சொல்லுக்கும் பொருளுக்கும் குற்றங்கள் எவை உண்டு; உண்டாயின், அச் சொல்லும் பொருளும் வடிவாக இருக்கும் உங்கள் இருவரையும் சேர்ந்த குற்றங்களாம் அல்லவோ? ஆதலால் என் பாடலைச் சுவை உண்டெனக் கொண்டு ஏற்றுக் கொள்வாயாக.

(அ - ள்.) சூடுதியால் (ஆல்) - அசைநிலை. நவை - குற்றம்; அற - மிக; எயில் - மதில்; எயில் மூன்று - முப்புரம். உண்டவர் - அழித்தவர் (சிவனார்) 'வைகும் அம்மே' நீவிர் இருவிர் என்றது உமையையும் சிவனாரையும். உமையம்மையும் சிவபெருமானும் முறையே சொல்லின்

வடிவாகவும், பேரருளின் வடிவாகவும் இருத்தலின் "குற்றமவை யுண்டு நீவிர் இருவிர்க்குமே" என்றார். அம்மையப்பர் சொற்பொருள் வடிவாக இருத்தல் திருவிளையாடல் இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலத்தால் அறியப் பெறும் செய்தியாம்.

## நேரிசை வெண்பா

19. விண்டிருந்த பொற்கமல மீதிருந்த பொன்னினையும்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமால்—தொண்டரண்டர்
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன்.

(தெ - ரை.) அடியார்கள் தேவர்களின் இனிய பூங்காவில் அமர்ந்து நீங்கா இன்பத்தில் நிலைத்திருக்க, அழகிய மதுரைக்கண் அமைந்த கடப்பஞ் சோலையில் திருக்கோயில் கொண்டிருக்கும் பொன்னாகிய மீனாட்சியம்மை, மலர்ந்து விரிந்த அழகிய செந்தாமரைப் பூவின்மேல் வீற்றிருக்கும் பொன் ஆகிய திருமகளையும் சிற்றேவல் கொண்டு விளங்குவாள்.

(அ - வி.) விண்டு - மலர்ந்து; பொற்கமலம் - அழகிய தாமரை; இது செந்தாமரை; பொன் - இலக்குமியாம் திருமகள்; குற்றேவல் - சிறுசிறு வேலைகள்; தேங் கா - இனிய சோலை; தென்மதுரைப் பொன், பொற்கமலப் பொன்னையும் குற்றேவல் கொள்ளும் என இயைக்க. பொற்கமலப் பொன்னினையும் குற்றேவல் கொள்ளும் என்றமையால் மற்றை மாதரைக் குற்றேவல் கொள்ளுதல் சொல்லாமலே அமைந்தது.

## கட்டளைக் கலித்துறை

20. பொற்பூர வல்லி கமலத்த ளேகொல் புகுந்தகமும்
வெற்பூர வல்லி பிறந்தக மும்மது மீட்டுமென்னே
அற்பூர வல்லியென் வன்னெஞ்சக் கஞ்சத்தெம் ஐயனொடும்
கற்பூர வல்லி குடிபுகுந் தேநின்ற காரணமே.

(தெ - ரை.) கற்பூரவல்லியாம் மீனாட்சியம்மை புகுந்த இடம் அடியார் உள்ளமாகிய தாமரையே யாம்; மலையரசன் பெற்ற மகளாகிய அவள் பிறந்த இடமும், மலைச்சுனைக்கண் அமைந்த ஒரு

தாமரையேயாம்; அன்புப் பெருக்குடைய கொடியாகிய அவ்வன்னே என் வலிய நெஞ்சத் தாமரையின்கண் எம்பெருமானுடன் மீண்டும் குடிபுகுந்திருக்கும் காரணம்தான் என்னேயோ? இவள் வெண் டாமரையில் விளங்கும் அழகிய கலைமகளே போலும்; அன்றிச் செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளே போலும்!

(அ - ம்.) பொன் - அழகு; பூரவல்லி - கலைமகள்; கமலத்தள் - திருமகள்; கொல் என்பதைப் பூரவல்லி, கமலத்தள் என்னும் ஈரிடத்தும் கூட்டுக; புகுந்த அகம் - புகுந்த மனை; வெற்பு ஊர் அ வல்லி - மலையில் பிறந்த அந்தக் கொடிபோன்றவள்; அது - அத் தாமரை; அற்பு - அன்பு; கஞ்சம் - தாமரை; ஐயன் - இறைவனும் சிவன்; "மீட்டும் குடிபுகுந்தே நின்ற காரணம் என்னே" என இயைக்க.

முதலீறு (அந்தாதி)த் தொடையால் அமைந்த இந் நூல் 'கார்' எனத் தொடங்கி 'காரணமே' என மண்டலித்து (சுழற்சியுற்று) முடிந்தது.

---

## பாட்டு முதற்குறிப்பு

[எண்: பாட்டெண்]

